Regd. No. 2975. ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 262.

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 8. ஜீவியச் சந்தா ரூ. 25.

## ஸ்பெஷல் ஸஞ்சிகை.

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

ஸாதாரணஸூ ஆவணிமீ வெளியிட்ட ஸ்பெஷல் ஸஞ்சிகை.

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 262.



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

ஸாதாரண வருஷம் ஆவணி மாதம் வெளியிட்ட

**ஸ்பெஷல் ஸஞ்சிகை.**

## ஸ்ரீராமாநுஜன் அபிமானிகளான அனைவரும் ஊன்றிநோக்குக.

ஸ்ரீராமாநுஜன் 260, 261. ஒன்று சேர்ந்த ஸஞ்சிகை அரியபெரிய அறுநூறு விருந்துகளில் இருநூறு விருந்துகள் கொண்டு ஸமீப காலத்தில் வெளிவந்துள்ளது, அனைவர்க்கும் கிடைத்திருக்கிறது. அடுத்தபடியாக மேல் விருந்துகளையும் ஆவலுடன் எதிர்பார்த்திருக்கின்றீர்கள். இருநூற்றொன்று முதல் நானூறு



ஈறான விருந்துகளை விரைவில் உபஹரிக்கப்போகிறோம். ஐப்பசித்திருமூலத்திற்குள் முழுதும் பெற்று அநுபவிப்பீர்கள். இந்த ஸஞ்சிகை தனி மலராக வெளி வருகின்றது. இங்ஙனே இது வெளிவர வேண்டிய ஆவச்யகதையைப்பற்றி அடுத்தபடி தெரிவிக்கலாகும். அதற்குமுன் பேரின்ப வெள்ளமான சில செய்திகளைத் தெரிவிக்கிறேன். அதாவதென்னென்னில்; மற்றும் அற்புதமான அறுநூறு விருந்துகளும் நிகழும் ஆவணித் திங்கள் முடிவதற்குள் (அல்லது) புரட்டாசித் திருமூலத்திற்குள்ளாகப் பெறுவீர்கள். *மொய்த்துக் கண்பனிசோர மெய்கள் சிலிர்ப்ப* என்ற குலசேகரப்பெருமாள் பாசுரப்படியிலே நின்று அதைப் பற்றி விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன், ஏற்கெனவே ஸங்கல்பித்த அறுநூறு விருந்துகள் நாநாரஸங்கள் கொண்டு பற்பல விஷயங்களைப் பற்றியவையென்பதை அறிந்திருக்கிறீர்கள். அப்படியன்றிக்கே மணவாளமாமுனிகளின் பெருமையைப் பற்றியே ஒரு அறுநூறு விருந்து அளிக்கலாகாதோ? என்று. அடியேனுடைய பக்திக்குரிய ஒரு மஹாஸ்வாமி ஸந்நிஹித காலத்தில் ஸாதித்தார். அதை மணவாளமாமுனிகளின் நியமனமாகவே சிரமேற்கொண்டேன். மாமுனிகளின்

அறுநூருண்டு நிறைவு மஹோத்ஸவத்தை யுத்தேசித்துச் செய்வது இங்ஙனே யமையப்பெறுவது அவசியமென்றும் இதுதான் மிகச் சிறந்த கைங்கரியமென்றும் அறுதியிட்டேன்.

"கடல் சூழ்ந்த மண்ணுலகம் வாழ" என்று வாழ்த்துகிருேமாதலால் கடல் சூழ்ந்த உலகமெல்லாம் அநுபவிக்குமாறு அவ்வறுநூறு விருந்துகளை வடமொழியிலும் அளிக்கிறேன். அது ச்லோக ரூபமானது. வ்ருத்தரத்நாகரத்தில் எத்தனை வகையான விருத்தங்களுண்டோ அத்தனை வகைகளிலும் அமைந்தது. அந்த சுலோகங்களின் நேரானமொழிபெயர்ப்பு வசனங்களே தமிழ் விருந்தாகும். சுலோகங்களெல்லாம் மிகவழகிய தேவநாகர லிபியில் அச்சாகி வருகின்றன. அவற்றின் ஆக்கமான தமிழ் விருந்துகள் தனியாகவே அச்சாகி வருகின்றன. ஸம்ஸ்க்ருதத்தை அடியேனுடைய வைதிக மநோஹரா பத்ரிகை மூலமாக வடநாட்டினர் அநுபவிப்பர்கள். தமிழ் நாட்டிலுள்ள ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களும் ஸ்ரீ ராமாநுஜன் மூலமாக அநுபவிப்பர்கள். தொடரும் என்றிடாமல் ஏக காலத்திலேயே பரிபூர்ணநுபவம் பெறுவிப்பது திண்ணம். மணவாள மாமுனிகளின் நிகரில்லாத் திருவருளின் பயனாக நிகழுமிதனில் விஸ்மயலேசத்திற்கும் இடமில்லையன்ரே. ...

## ஓர் பேரின்ப விண்ணப்பம்

மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு விழாக் கொண்டாட்டத்தின் பொருட்டு காஞ்சீபுரத்தில் ஓர் கமிட்டி சென்ற வைகாசி மாதத்தில் தேவப் பெருமாள் திருத் தேர்த் திருநாளினன்று ஸன்னிதி வீதியில் ஸ்ரீவானமாமலை மடத்தில் கூடிய ஸதஸ்ஸின் மூலமாக நிறுவப் பட்டிருக்கின்றது.

## ஸ்ரீகாஞ்சீ மணவாளமாமுனிகளின் ஆருவது நூற்ருண்டு பூர்த்தி விழாக் கமிட்டி

### ஷை கமிட்டியின் அங்கத்தினர்கள்,

ஸ்ரீமான் உ. வே. ப்ர ப. அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமி—தலைவர்
,, C. கிருஷ்ணமாச்சாரியார், அட்வகேட்—காரியதரிசி
,, தி. ஈ. விஜயராகவன்—உதவிக் கரியதரிசி
,, A. K. ராஜகோபாலாச்சாரியார், Auditor—பொருளாளர்
,, தி. அ. ஸம்பத்குமாராச்சாரியார், M.A., காஞ்சீபுரம்.
,, N. ஜீயப்பய்யங்கார் ,,
,, நல்லப்பா ரங்கஸ்வாமி அய்யங்கார். அட்வகேட் வேலூர்
,, K. V. ராகவாச்சாரியார் (ஆடிடர்) வேலூர்
,, K. V. நரசிம்மாச்சாரியர் ,, சித்தூர்
,, K. R. சத்யன் ,, காஞ்சீ
,, வா. திருவேங்கடாச்சாரியர் (ஸ்ரீ தே. மணவாளமாமுனிகள் சன்னிதிக்காரர்.
,, திருமணி ஸ்ரீனிவாஸவரதாச்சாரியர் (ஸ்ரீ. தே. ஆழ்வார் சன்னிதிக்காரர்)
,, ப்ர. ஸ்ரீனிவாஸாச்சாரியர், காஞ்சீ

ஸ்ரீமான் உ. வே. தி.அ.பு. ஸ்ரீனிவாஸ வரதாச்சாரியர், Prop. ஸ்ரீ வெங்கடேச்வரா பிரஸ் காஞ்சீ.
,, V. N. வெங்கடவரதாச்சாரியர், அட்வகேட். சென்னை
,, K. S. சம்பகேச அய்யங்கார், அட்வகேட். சென்னை
,, K. V. விஜயராகவன், அட்வகேட் காஞ்சீ
,, G. கிஷ்ணமாச்சாரியர், அட்வகேட், செங்கற்பட்டு
,, P. B. ராமாநுஜாச்சாரியர், காஞ்சி
,, A. K. சடகோபாசாரியர், அம்பததூர்
,, K. V. Srinivasan, Triplicane.
,, பரமார்த்த பூஷணம்
,. நாதுல்ல சம்பத்செட்டியார் } சென்னை
,, V. எம்பெருமானுர் செட்டியார், Hoe & Co., தலைவர், சென்னை
,, A. B. கண்ணபிரான் முதலியார் கண்ணன் & கிருஷ்ணு டாக்கீஸ் காஞ்சி
,, M. B சாரங்கபாணி நாயகர் மர வியாபாரம் காஞ்சி

இந்த கமிட்டியின் சார்பாக நடைபெறும் செயல்கள் அடுத்த இதழில் தெரிவிக்கப்படும்.

ஸ்ரீமதித்யாதி உபயவே. முதலியாண்டான் பெரியஸ்வாமி ஸ்ரீசைலாசார்ய ஸ்வாமி திருவுள்ளம்பற்றின படியொன்று; (அதாவது) மணவாளமாமுனிகளின் ரஹஸ்ய சதுஷ்டய வியாக்கியானங்களையும் ஈடு முப்பத்தாருயிரப்படியையும்தகுந்த அதிகாரிகளைக் கொண்டு ஆங்காங்கு ஸ்வாமி ஸன்னிதியில் ஸேவிக்கச்செய்ய வேணுமென்பது இந்த அபிஸந்தியை அனைவரும் ஏக கண்டமாக ஆமோதித்தார்கள். இந்த நிகழ்ச்சி திவ்ய தேசங்கள்தோறும் நடைபெறுவது விசேஷம்.

## பெரியார்களிருவரின் பரமபதப்ராப்தி

(1) ஸ்ரீகாஞ்சீபுரியில் ஞானசீலவயோவ்ருத்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி, வரதாசார்ய ஸ்வாமி 30–8–70 ஞாயிற்றுக்கிழமை மாலை திருநாட்டுக்கெழுந்தருளினுர். இந்த ஸ்வாமிக்கு எண்பத்தைந்து திருநக்ஷத்ரமாகிறது. நடமாட்டமில்லாமல் சயனமாக எழுந்தருளியிருந்தது அதிக நாளில்லை. பத்திருபது நாட்களுக்குள்ளாகவேயாம். இவர் லௌகிக உத்யோகத்திலிருந்தபோது, அகாலத்திலேயே உத்யோகத்தை விட்டு விலகி ஸ்வஸ்தானத்தில் நித்யவாஸ நிரதராய் தேவப்பெருமாளுக்கு அருளிச்செயல் கைங்கரியம் பண்ணிக் காலத்தைக் கழிக்க வேணுமென்னும் அபிருசியினுல் திவ்யப்ரபந்தங்களைப் பூர்த்தியாக அதிகரித்து ஸ்வருப க்ரந்தகாலக்ஷேபங்களுஞ்செய்து, தாம் ஆசைப்பட்டபடியே 40ஆண்டு கைங்கரிய நிரதராக எழுந்தருளியிருந்தார். இவருடைய வியோகம் தேவப்பெருமாளுக்குப் பெருத்த நஷ்டமென்றே சொல்ல வேணும். மணவாளமாமுனிகள் ஸன்னிதியில் நடந்த மஹாமண்டப நிர்மாணத்திற்கு மிகவும் கண்யமான பேருதவிபுரிந்த வள்ளல் என்பதும் இவர் தமக்கு ஏற்றம். இவரை லபித்துப் பரமபதநாதன் பேரின்ப வெள்ளத்தில் ஆழ்ந்திருப்பன். *

(2) அதே நாளில் உலகம் நிறைந்த புகழாளரான ஸ்ரீமதுபய வே. ஸர். S. வரதாசார்ய ஸ்வாமியையும் இம்மண்ணுலகம் இழந்துவிட்டதென்று இதே க்ஷணத்தில் கேட்டு வருந்துகிறோம். லோக விலக்ஷணரான இந்த ஸ்வாமியின் பெருமை வாசாமகோசரம். எவ்வளவெழுதினுலும் பர்யாப்தி பிறவாது. *

# பாம்பே பனஸவாடி திருவேங்கடமுடையான் ஸன்னிதியில் விசேஷ நிகழ்ச்சி.

மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு நிறைவு மஹோத்ஸவம் ஸாதாரண ஸம்வத்ஸரத் தொடக்கத்திலிருந்தே ஆங்காங்கு ஓரோ வகையாகக் கொண்டாடப் பட்டுவருகிற முறையில் சென்ற ஜூன்மீ 10தேதி முதல் 21தேதி வரையில் ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் ஜகத்குரு காதி கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் ஆத்யக்ஷ்யத்தில் ஈடு மஹோத்ஸவம் பரமவிலக்ஷணமாக நடத்தப்பட்டது. கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் முதலான பல திவ்ய தேசங்களிலிருந்து முப்பது ஸ்வாமி களுக்குமேல் எழுந்தருளி யிருந்து வேதபாராயண திவ்ய ப்ரபந்த ஸேவைகளுடன் ஈடு முப்பத்தாருயிரப்படியைப் பூர்த்தியாக ஸேவித்துத் தலைக்கட்டினார்கள். உபய வேதாந் தார்த்த உபந்யாஸங்களும் வித்வான்களால் நடத்தப்பட்டன. ஆங்காங்கு நடைபெற வேண்டிய ப்ரக்ரியைக்கு இதுவொரு ஆதர்சமா யிருந்ததென்று கருதத்தக்கது. ...

## பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திப்ரகாசனங்கள்.

எற்கெனவே அடியேன் ஸ்ரீராமாநுஜன் 250ல் விஜ்ஞாபித்திருந்தபடி
இன்றுவரையில் அச்சிடப்பட்டுள்ளவற்றின் அறிக்கை:

1. பூருவாசாரியர்களின் ஸகலஸ்தோத்ரபாடங்களும் தேவநாகரலிபியில். (இதைப்பற்றி ஏற்கெனவே விளம்பரம் செய்திருந்தோம்.) விலை 3-00

2. எம்பெருமானார் அருளிச்செய்த ஒன்பது திவ்யக்ரந்தங்கள்கொண்ட ஸ்ரீபகவத் ராமாநுஜக்ரந்தமாலை தெலுங்குலிபியில் [நூறு பாரங்கள், 804 பக்கங் கள் கொண்டது] அச்சிட்டு முடிக்கப்பட்டு பைண்டாகி வருகிறது. (விலை 15 ரூ.) ஆவணித்திருமூலத்தன்று வெளியிடப்பெறும்.

3. மேலே குறித்த பகவத்ராமாநுஜக்ரந்தமாலை தெலுங்குலிபியிற் போலவே தேவநாகரலிபியிலும் பதிப்பிக்கப்பட்டு வருகின்றது. முக்கால்பாகம் முடிவுபெற்றது. அனேகமாக கார்த்திகைத்திருமூலத்தன்று வெளிவந்துவிடும்.

4. ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரக்ரந்தமாலை (தெலுங்குலிபி) மணவாளமாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களனைத்துங்கொண்ட மஹாநிதி அச்சாகி வருகின்றது. முதல் ஸம்புடம் ஐப்பசித் திருமூலத்திலும், இரண்டாவது ஸம்புடம் உத்தரா யணத்திருமூலத்திலும் வெளிவரும்.

5. எங்களாழ்வானருளிச்செய்த ஸ்ரீவிஷ்ணுசித்தீயமென்கிற வியாக்கியா னத்தோடு கூடிய ஸ்ரீவிஷ்ணுபுராணம் தேவநாகரலிபியில் அச்சாகி வருகின்றது. பெரியக்ரந்தமாகையால் முடிவுபெறுவதற்கு ஏறக்குறைய ஒருவருஷகாலமாகும்.

6 ஆளவந்தாரருளிச்செய்த ஸித்தித்ரயமும் ஆகமப்ராமாண்யமும்; நடா தூரம்மாள் அருளிச்செய்த தத்வஸாரமும் தேவநாகரலிபியில் அச்சிடப்பட்டு வரு கின்றன; ஐப்பசித்திருமூலத்தில் வெளிவரும்,

7. பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த திருநெடுந்தாண்டகவியாக்கியானம் தமிழ்லிபியில் அச்சாகி முடிவுபெற்றுள்ளது. விலை 4-00.

8. பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த அஷ்டாதசரஹஸ்யம் தமிழ்லிபியிலும் தெலுங்குலிபியிலும் (தனித்தனியே) இரண்டிரண்டுஸம்புடமாக அச்சிடப்பட்டு வருகிறது. ஒருஸம்புடம் ஐப்பசித்திருமூலத்தில் வெளிவரும்.

9. முமுக்ஷுப்படிஸாரார்த்த தீபிகையும் தத்வத்ரய ஸாரார்த்த தீபிகையும் வெளிவந்திருப்பது உலகமறியும். ஸ்ரீவசனபூஷணஸாரார்த்த தீபிகை ஐப்பசித் திருமூலத்தன்று வெளிவரும். இவை மூன்றும் தெலுங்குபாஷையில் மொழிபெயர்க்கப்பட்டவை புரட்டாசித்திருமூலத்தன்று வெளிவரும். முமுக்ஷுப்படி தத்வத்ரய வியாக்கியானங்களுக்கு ஆங்கிலமொழிபெயர்ப்பு அச்சாகி முடிவுபெற்றுள்ளது. (க்வாளியர் ஸ்ரீஉவே. S. ஸத்யமூர்த்திஸ்வாமியின் மொழிபெயர்ப்பு.) விலை ரூ. 3-50

10. மேலே குறித்த மூன்று ரஹஸ்யங்களுக்கும் ஸம்ஸ்க்ருத ஹிந்தி விவர்த்தங்கள் அச்சிடப்பட்டுவருகின்றன.

ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ராதிபரான ஸ்ரீ உ வே. S கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் M. A. B. L. Advocate ஸ்வாமி ஸ்ரீவசன பூஷணத்தை இரண்டு வியாக்கியானங்களோடும் இரண்டு அரும்பதவுரைகளோடும் அச்சிட ஆரம்பித்திருப்பதை ஏற்கெனவே தெரிவித்திருந்தோம். அதில் ஒரு பகுதி முடிவுபெற்றுள்ளது; (நாற்பது பாரங்களுக்கு மேல் கொண்டவிது) ஐப்பசித்திருமூலத்தன்று வெளியிடப்படுமென்று அறிந்து மகிழ்கிறோம். ஸ்ரீபதுபய வே. வித்வான். வேளுக்குடி வரதாசார்ய ஸ்வாமியால் அருளிச்செயல்ரஹஸ்யம் அச்சிடப்பட்டு அதனோடு கூட வெளிவருமென்றறிகிறோம்.

## ஸ்ரீ ராமாயண ஸ்ரீ பாகவதப்ரகாசனம்.

ஸ்ரீராமாயணத்திற்கு மிகச்சிறந்த வியாக்கியானம் கோவிந்தராஜீயம். ஸ்ரீபாகவதத்திற்கு அப்படிப்பட்ட வியாக்கியானம் வீரராகவீயம். இவ்விரண்டும் இக்காலத்தில் கிடைப்பது அரிதாயிற்று. ஸ்ரீமத்பரம ஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் இவ்விரண்டையும் மூலத்தோடுகூட தெலுங்குலிபியில் பதிப்பிக்க ஏற்பாடு செய்து கோவிந்தராஜீய ஸஹிதமான ஸ்ரீராமாயணம் சித்தூரிலும், வீரராகவீயஸஹிதமான ஸ்ரீபாகவதம் ஸகிந்தராபாதிலும் அச்சாகி வருகிறது.

## ** கவனிக்கவேண்டிய ஒரு மாறுதல். **

தத்வத்ரய ஸாரார்த்த தீபிகை, ஸ்ரீவசனபூஷண ஸாரார்த்த தீபிகை முதலான ரஹஸ்யார்த்த க்ரந்த வெளியீடுகளை விருப்பமுள்ளவர்கள் தனிப் பணமனுப்பிப்பெறவேணுமென்று முன்னிதழில் அறிக்கை வெளியிட்டிருந்தோம். அதிகாரிகளென்று நாமறிந்தவர்களுக்கு நாமே அனுப்பிவிடுகிறோம். ஐப்பசி மாத முடிவுக்குள் கிடைக்கப் பெறுதவர்கள் முன்பு தெரிவித்திருக்கிறபடி ஸ்டாம்பு அனுப்பிப் பெறக்கடவர்கள். —(நிர்வாஹ அதிகாரி).

# இந்த ஸஞ்சிகையின் விசேஷத்தைப்பற்றி

**அன்பர்களும் உதாஸீனர்களுமான உபயகளேயர்க்கும் விஜ்ஞாபனம்.**

இது ஸ்பெஷல் ஸஞ்சிகையென்று முகப்பில் தெரிவித்திருக்கிறேன். என்னுடைய பற்பல நூல்களேயும் தாமாகவே விரும்பிப் படித்திருக்கின்ற உங்களே இப்போது இதனே விசேஷித்துக் குறிக்கொண்டு படிக்கவேணுமென்று கோருகிறேன்.

1. ஸ்ரீமதுபயவே. வித்வான். கோமல். சேஷாத்ரியாசார்யஸ்வாமி.
2. ,, வித்வான். நவநீதம் ஸ்ரீராமதேசிகாசாரியர் திருவிண்ணகர்.
3. ,, வித்வான். பாதூர் ராகவாசாரியர் ஸ்வாமி,மதுராந்தகம்.
4. ,, வித்வான். வாஸுதேவாசாரியர் ஸ்வாமி, உத்தரமேரூர்.
5. ,, சேட்லூர். கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, புநர்வஸு பத்ராதிபர்.
6. ,, M. S. வரதாசாரியர். "மஹாரவிவேகி" அடையாறு.

இந்த ஆறு ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகளே மத்யஸ்தர்களாயிருந்து விமர்சிக்கும்படி முன்னம் வேண்டிக்கொள்ளுகிறேன். ஒருதலேயான ஆக்ரஹமும் மாச்சரியமுமில்லாமல் விஷயங்களில்மட்டும் கண்செலுத்தி ஆராய்ச்சி செய்யக் கூடியவர்களென்கிற விச்வாஸத்தினுல் இப்பெரியார்களேக் குறிப்பிட்டேனிங்கு. இவர்கள் ஆராயவேண்டிய விஷயம் எது? என்பது மேலே விளங்கும். ஸம்ப்ரதாய பேதஸித்தமான விஷயங்களில் இப்பெரியார்கள் மத்யஸ்தர்களாக இருக்கமுடியா தாகையாலே அத்தகைய விஷயங்களில் நாம் இவர்களுக்குப் பரிச்ரமத்தைக் கொடுக்க விரும்பவில்லே. விரும்புவது உசிதமுமன்று. ராஜமார்க்கமாகவுள்ள தேசிகதிவ்யஸூக்திகளில் நேர்ந்திருக்கின்ற விவாதங்களில் மட்டுமே விரும்புவது.

இந்த ஸஞ்சிகையில் இரண்டேடுகளேத் தள்ளிப்பார்த்தால் பூதிகந்திபுஷ்ப ப்ரஞ்சனம் எனகிற நமது நூலேக் காண்பீர்கள். அதற்கு முகவுரை என்றுள்ள சிறு பகுதியைப் பூர்த்தியாக முன்னம் வாசித்து முடித்துவிட்டுப் பிறகு இவ்விடத்தைத் தொடர்ந்து வாசிக்கக் கோருகிறேன். ... ... ... அந்த முன்னுரையை வாசித்தாயிற்ரு? அதற்கு மேலுள்ள விஷயங்களேப் பூர்த்தியாகப் பிறகு வாசித்தாலும் ஒவ்வொரு பாராவுக்கும் தலேயங்கமிட்டிருக்கிருேமே; அதைமட்டும் வரிசையாக வாசித்து முடித்துவிடுங்கள். தன்னடையே வாசித்துமிருப்பீர்கள்.

ஸ்ரீமான் D. T. தாதாசாரியாரவர்களுக்கும் நமக்கும் பலவருஷங்களாகப் பலவிஷயங்களில் விவாதம் விளேந்து அதுக்ரந்தங்களிலும் ஏறியிருந்து இடையில் சிலகாலம் ஓய்ந்திருந்தது. அவர் விடைகூறவேண்டியநிலேமையில் நிற்கிருர் அவர் இப்போது சென்னேயில் வஸித்துவருகிருராம். அங்குச் சில பாகவதர்களிடத்தில் விப்ரலம்பமான விஷமப்ரசாரங்கள் செய்துவருவதாக நமக்கு எட்டிற்று அவர் விநியோகித்த ஒன்றிரண்டு சுவடிகளேயுங் காணலாயிற்று ஸாமான்யமநுஷ்யனு என்னேப்பற்றியோ எனது உக்திகளேப் பற்றியோ இவர் யதேஷ்டமாக நிந்தித்து எழுதலாம். அப்படி அளவுகடந்து எழுதியுமிருக்கிருர். அவற்றுக்கு

ஒன்றுவிடாமல் விடையிறுந்துவருகிறேமென்பதை உலகமறிந்திருக்கிறது. இவர் தமக்கு வேண்டாத பூர்வாசாரியர்களை [பெரியவாச்சான்பிள்ளை முதலானுரை] தேசிகன் ஆசார்யபதவியில் வைத்து ஆராதிப்பவர் என்பதை நமது நூல்களால் நன்கு தெரிந்துகொண்டதனுல் அவர்களை நிந்தித்துத் தாம் க்ருதக்ருத்யராக வேணுமென்று உறுதிகொண்டுவிட்டார். அந்த நிந்தைகளெல்லாம் ஸர்வாத்மநா அஸ்தாநே என்று விளக்குவதற்காகவே நமது பூதிகத்தி புஷ்பப்ரஞ்சன நூல் அவதரிக்கின்றது. இந்நூலை "விஸ்தரபயாத் விரமாம:" என்றே "விரிவுக்கஞ்சி நிற்கின்றேன்" என்றே எழுதி நிற்கிற ரீதியிலே நில்லாமல் விரிவுக்கஞ்சாமலே யெழுதி தத்வஜிஜ்ஞாஸுக்களுக்குத் தத்துவமுணர்த்தியே தீருவோம் ஸ்ரீமான் D T. தாதாசாரியாருடைய பலபல துர்வாதங்களைப் பலநூல்களில் உதறித்தள்ளி யிருக்கிறேனென்பதை அறிந்திருககிறீர்கள்.

எழுதுகிருரிவர்—சிலவித்வான்கள். சென்னையில் ப்ரவசனம் செய்பவர்கள் கலாவைஷம்யம் பாராட்டாமல் ஸாதுக்களாயும் ஸாத்விகர்களாயும் தங்கள் காரியத்தைமட்டும் பார்த்துக்கொண்டு போகிருர்களென்றும் நானொருவனே பயங்கரக்ருத்யங்கள் செய்து வருகிறேனென்றும்.... கேண்மின்; எல்லாவகைக் காரியங்களிலும் எல்லாருமே ப்ரவர்த்திக்கவேணுமென்பதில்லை ப்ரவர்த்திப்பது மில்லை. "யொ யொ ந: ப்ரசோதயாத்" என்கிற வேதமந்திரத்தை நித்யமும் நாம் நூறுவிசை ஓதிவருகிருேம். "மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞாநம் அபோஹநஞ்ச" என் கிருன் கீதாசார்யன். ஸர்வஜ்ஞர்களாய் தேசிகனுக்கும் வழிகாட்டிகளான பூர்வா சாரியர்களை இவர் அவலீலையாக நிந்தித்திருப்பதை அந்த ஸாதுக்களும் ஸாத்விகர் களும் பார்த்திருக்க ப்ரஸக்தியேது? இவர் தமது சுவடிகளைச்சில பெண்டிர்க்கும் பேதையர்க்குந்தானே ஸமீபகாலத்தில் விநியோகிக்கத் தொடங்கியிருக்கிருர். நம்பிள்ளை தொடங்கி மணவாளமாமுனிகளீருகவுள்ள ஆசாரியர்களில் ஒருவர்க்கும் சாஸ்த்ரஜ்ஞானமே கிடையாதென்றும் ஸ்ரீ பாஷ்ய பரிசயமும் கிடையாதென்றும், பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளைத் திருத்துவதற்கும் கண்டிப்பதற்குமே தேசிகன் நிகமபரிமலத்தை யெழுதினுரென்றும் D. R. போல்வாருடைய பழம் பாட்டையே இவரும் பாடிக்கொண்டிருக்கிருர்.

ஸாரமாகத் தெரிவிப்பதைக் கேண்மின். தாத்பர்ய சந்த்ரிகையிலும் ஸச் சரித்ரரக்ஷையிலும் விசிஷ்ய த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளீதத்ஸாரங் களிலும் தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளையே அடியொற்றி யிருக்கிருரென்றும், பிள்ளானுடைய ஆருயிரப்படியை தேசிகன் ஓரிடத்திலும் அநு ஸரிக்கவில்லை யென்றும், திருவாய்மொழிக்கு ஆருயிரப்படியென்று ஒரு வியாக்கி யானமிருந்ததாகவே தேசிகன் அறிந்திலர் (அல்லது) அறிவித்திலர் என்றும் நாம் விரிவாக நிரூபித்திருக்குமவற்றை இவர் (D. T. T.) மறுக்கவும் மறைக்கவும் பார்க் கிருர். இவர்க்கு ஸ்வஸம்ப்ரதாயக்ரந்தங்களிலேயே பரிசய லேசமுமில்லையா யிருக்க, பெரியவாச்சான்பிள்ளை முதலானுருடைய திவ்யஸூக்திகளில் அது ஸுதராம் அப்ரஸக்தம். ஸர்வதந்த்ரஸ்வதந்திரரான தேசிகனுடைய ஸ்ரீஸூக்தி யையே அஸமஞ்ஜஸமென்று தூஷித்தவிவர் தேசிகனுக்கும் தேசிகர்களான ஆசாரியாகளின் ஸ்ரீஸூக்திகளை தூஷிக்கிருரென்ருல் இதில் என்ன வியப்பு?

பெரியாழ்வார் தம்மைத் தலைமகளாக்கித் தாய்ப்பேச்சாலே பேசின இருபதி கங்களில் இரண்டாவதான *நல்லதோர் தாமரைப்பொய்கையில் இரண்டாம் பாட்டில் "நாராயணன் செய்த தீமை, என்றும் எமர்கள் குடிக்கு ஓர் ஏச்சுக் கொலாயிடுங்கொலோ" என்றது அற்புதமானவருளிச்செயல். இங்குச் சொல்லப்பட்ட நாராயணன் செய்த தீமை எது வென்பதைப் பேராசிரியர்கள்பக்கல் கேட்டுக் கொள்வது. பாசுரத்தையூன்றி நோக்கியும் தெரிந்து கொள்ளலாம். இதில் "என்றும் எமர்கள் குடிக்கு ஓர் ஏச்சுக்கொலாயிடுங்கொலோ" என்றதுண்டே, அதை மட்டும் இவர்க்கு எடுத்துணர்த்துகிறேன். தேசிக ஸ்ரீஸூக்தியில் இவர்க்கு அஸாமஞ்ஜஸ்யம் தோன்றினால் "இப்படியிப்படி அநுபபத்தி தோற்றுகிறது; சாஸ்த்ரஜ்ஞர்களான மஹான்கள் அருள்கூர்ந்து பரிஹரிக்கவேணுமென்று ப்ரார்த்திக்கிறேன்" என்று இத்தகைய பல வழிகளில் விநயத்தைக்காட்டி வரைந்திருக்கலாம். மாச்சரியமுள்ள மதாந்தரஸ்தர்களும் எழுதமாட்டாததான "அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்" என்கிற வாக்கியத்தைச் சிறிதும் கூசாமல் எழுதிவைத்த விது இவர் தம் குடிக்கு என்றும் ஏச்சாகுமென்பதை இவர் அறிந்து கொள்ளாமலிருக்க முடியுமா? தேசிகனுக்குப் பரிந்து பெரியவாச்சான்பிள்ளை முதலான ஸர்வஜ்ஞ ஸதாசார்யஸார்வபௌமர்களை நிந்திக்க இவரா அதிகாரி? இவரை எதிரியாக்கி யெழுதுவதனால் நமது அருமருந்தன்ன அவகாசத்தைப் பாழாக்கிக் கொன்வது எவ்வளவோ வருந்தத்தக்கதல்லவா? ப்ரக்ருதத்தில் அடியேன் புரிந்துவரும் தொண்டுகளில்இதுவும் முக்கியமான தொண்டுதானென்று எண்ணியே வருத்தத்தை விலக்கி உகப்பை ஏன்றுகொண்டே யெழுதுகிறேன்.

இவர் தமது பூதி கந்திபுஷ்பத்தில் (பக்கம் 78ல்) "ஸ்ரீ ராமாநுஜன் 132ல்" என்று தொடங்கி இவரெழுதியுள்ளவற்றை அப்படியே அநுவதிக்கிறேன்;—

"ஸ்ரீராமாநுஜன் 132ல் (P. B. A. எழுதியிருப்பதாவது) ஸம்ப்ரதாயவிஷயமாக நாமெழுதும் நூல்களுக்கு ஜீவநாடியான விஷயங்கள் இரண்டே; (1) தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை மணவாளமாமுனிகளுக்கும் மேலாகக் கண்டபாடம் செய்திருந்தவர்; அந்த ஸ்ரீஸூக்திகளையே பற்றுக்கோடாகக் கொண்டு எழுதுமவர் தேசிகன் என்கிறவிது ஒரு விஷயம் (2) இவ்வுண்மையை அறியகில்லாதவர்களாய் (அல்லது) அறிந்துவைத்தும் அபலபிப்பவர்களான நவீனர்கள் தேசிகனைப் பெரியவாச்சான்பிள்ளைக்கு விரோதியாக எழுதுவதும் அந்த தேசிகனோடு தங்களுக்கொரு தொடர்பு இருப்பதாக அபிநயிப்பதும் மிகத்தவறு-என்கிறவிது மற்றொருவிஷயம். (இப்படி உண்மையாக நாம் எழுதியிருப்பதை அநுவதித்துவிட்டு மேலே

மூளைக்கலக்க மித்யாதிகளால் நம்மை அபரிமிதமாக ஸம்பாவித்திருக்கிறார். அந்த ஸம்பாவனைகளையெல்லாம் உகந்து ஏற்றுக்கொள்வோம். மேலே உதஹரித்த ஜீவநாடியென்னும் இரண்டு விஷயங்களும் ஸத்யமானவையே "ஸத்யமானவையே" யென்று என்கையினாலெழுதுவதிலும் என்வாயினால் சொல்லுவதிலும் என்ன பயன்? இவர் வாயினால் சொல்லுவித்து, இவர் திருக்கையினால் எழுதுவிக்கிறேன்.

இவர் தமது பூதிகந்தி புஷ்பத்தில் 64, 65, 66, பக்கங்களில் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்னாவளீ ஸாரங்களுக்கு ஆறுயிரப்படியோடு பொருத்தத்தையும்,

பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளோடு ஸம்பந்தமில்லாமையையும் மூதலிக்கப் பாடுபடுகிறார். [கீழே மத்யஸ்தர்களாக நம்மால் வரிக்கப்பட்டுள்ள மஹநீயர்கள் அறுவரும் இங்கே விசிஷ்ய மதிசெலுத்தவேணும்.] திருவாய்மொழி பத்தாம் பத்தின் முதற்பதிகமான *தாளதாமரைக்குப் பிள்ளான் இட்டருளின அவதாரிகையின்படியன்றிக்கே நம்பிள்ளை முதலானார் இட்டருளின அவதாரிகையையே தேசிகன் ஆதரித்து ரத்நாவளியையும் ஸாரத்தையும் பணித்துள்ளாரென்று நாம் (நினைவுக்கு வருகிறவரை, ஐந்து நூல்களில் நிரூபித்திருக்கிறோம். D.T.எழுதுரார்—

> "இங்கு மஹாவித்வான் (P. B. A.) திருவாய்மலர்ந்தருளுகிறார் 'ஸத்கதிஸ் ஸ்யாத்' என்பதற்கு வியாக்கியான மிட்டவர்கள் 'காளமேகப்பெருமாளே வழித்துணையென்று' என்றெழுதி வைத்தார்கள்.........." இத்யாதி.

மத்யஸ்த மஹான்களுக்கு இங்கு விஜ்ஞாபிக்கிறேன். "ஸத்பதவ்யாம் ஸஹாயம் என்று தாத்பர்யரத்நாவளியிலும், ஸத்ஸரணிம் என்று ஸாரத்திலும் தேசிகன் அருளிச் செய்திருப்பதை இவர் (D. T. T.) தமது கையாலெழுதுகிறார். இப் பதிகத்திற்கு ஆறுயிரப்படியில் காணுமவதாரிகை—"திருக்கண்ணபுரத்திலெம்பெருமானையநுபவித்து இப்போது திருமோகூரிலெம்பெருமானையநுபவிக்கிறார்" என்னுமிவ்வளவே. "ஸத்பதவ்யாம் ஸஹாயம்" என்று தேசிகன் ஸாதிக்கும்படியாக ஆறுயிரப்படியில் ஓரெழுத்துமில்லை. மற்ற வியாக்கியானங்களில்தானுள்ளது. (அதாவது) நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களில்தானுள்ளது. இதைத் தான் தேசிகன் பொன்னேபோல் போற்றினர் என்பது ப்ராமாணிகபரிசீலநீயம்.

இதற்கு இவர் எழுதுகிறார்—ஸத்பதவ்யாம் ஸஹாயம் என்பது த்ரமிடோபநிஷத்ஸாரத்தில்தான் உள்ளது. ஸாரக்ரந்தம் ஒரு சதகத்தின் ஸாரார்த்தத்தைத் தெரிவிப்பதேயொழிய தசகத்தின் ஸாரத்தைத் தெரிவிப்பதன்று. ஏவஞ்ச தேசிகன் கூறின ஸத்பதவீஸஹாயத்வம் பத்தாம்பத்தின் (அதாவது; நூறுபாசுரங்களின்) ஸாரார்த்தமே யொழிய *தாளதாமரையென்கிற ஒரு பதிகத்தின் ஸாரார்த்தமன்று—என்று. இதற்கு முண்டித மஸ்தகலலநாமணிகள் சிலர் ஏமாற்றமடையலாமத்தனை. பத்துப்பாசுரங்களின் ஸாரத்தைச் சொல்லும் போது பதிகத்தில் ஒரு பாசுரத்தையோ ஒன்றிரண்டு பாசுரங்களையோ தான் உயிராகக் கொள்ள முடியும். அப்படியே ஒரு சதகத்தின் ஸாரத்தைச் சொல்லும் போது ஒரு பதிகத்தின் ப்ரமேயத்தையே உயிராகக் கொள்ளமுடியும். வேறு விதமாக முடியவே முடியாது. ப்ரக்ருதத்தில் ஸத்பதவ்யாம் ஸஹாயமென்றது சதகத்தின் ஸாரமே; எந்த தசகத்தை உயிராகக் கொண்டு இதை ஸாரார்த்தமாக தேசிகனருளிச்செய்தாரென்று கேட்டால் கட்டகுட்யாம் ப்ரபாதம். அந்த ஸாரத்திலேயே (சுலோகம் 21ல்) "த்ரிவர்மாதிக்ராந்த ஸ்திர நகரகண்டாபதமதே: ஸஹாயீகுர்வாணச் சரமசதகே விந்ததி முநி:" என்றருளியதும் பத்தாம்பத்துக்குத் தாளதாமரைப் பதிகத்தை உயிராகக் கொண்டே யொழிய வேறு எந்த பதிகமும் ஸஹாய்த்வத்திற்கு ஸூசகமாக விரகில்லை.

மத்யஸ்தமஹநீயர்களே! உபஸம்ஹரிக்கிறேனிதை. தேசிகன் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீ ஸூக்திகளை எவ்வளவோ கொள்ளைகொண்டு அநு

பவித்தும் அநுபவிப்பித்தும் போந்திருக்கிருரென்பது நம்மால் செப்பேடும் கல் வெட்டுமாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஆருயிரப்படியை உபஜீவித்த விடம் ஒன்றிருந்தாலும் எடுத்துக் காட்டட்டுமிவர். பிள்ளானுடைய நிர்வாஹமென்று இருபத்து நாலாயிரப்படியிலும் ஈட்டிலும் பலவிடங்களில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. அப்படி ஓரிடமாவது தேசிக க்ரந்தங்களிலெடுத்துக் காட்ட இயலுமா? *ஓடும் புள்ளேறி* இவையுமவையும்* என்கிற பதிகங்களின் ப்ரமேயத்தைப் பற்றியே நாம் முதன்முதலாக விசாரம் தொடங்கினோம். இதில் இவர் ஆந்தனையும் போராடியிருக்கிருர். கடைசியாக இப்போது ஆருயிரப்படியில் இல்லாத ப்ரக்ஷிப்த வாக்யங்களை யெடுத்துக்காட்டியிருக்கிருர்; இதைப்பற்றி நாம் மேலே (பச்கம் 5ல்) "நமது பிரபல மான சபதமொன்று" என்றெழுதியிருப்பதை இந்த நூலுக்கு ஜீவநாடியாகக் கொள்ளுங்கள். "இதுகாறும் நான் வெளியிட்டிருக்கிற எண்ணூறு நூல்களையும் மயிலையில் கொணர்ந்து மஹான்களின் முன்னிலையில் கிழித்தெறிந்து விட்டு அவ்விடத்திலேயே தொண்டர்தொண்டனுயிருந்து ஆயுச் சேஷத்தைக் கழிக்கக்கடவேன்" என்பது என்னுடைய சபதமென்பதை உணருங்கள். அந்த விஷயத்திலும் *தாள தாமரைப்பதிகத்தைப்பற்றி மீண்டு உபபாதித்த விஷயத்திலுமே உங்களுடைய மாத்யஸ்த்யம் விரும்பப்பட்டது.

ப்ரஸங்காத் த்ரமிடோப நிஷத் தாத்பர்யரத்நாவளியில் ஒரு பெரிய விஷயங்கேண்மின்; திருவாய்மொழி பத்தாம்பத்தில் (3) *வேய்மரு தோளிணைப் பதிகத்தில் (6) *அடிச்சியோந் தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணு உன் கோலப்பாதம்* என்பது சுவைமிக்க பாசுரம். இதில் (ஆழியங்கண்ணு!) என்பதற்குக் கடல் போல் ச்ரமஹரமான கண்களையுடையவனே! என்று பொருள். இங்கு ஆழி யென்பதற்கு திருவாழி (சக்கரம்) என்கிற பொருளை எந்த ஆசார்யரும் அருளிச் செய்திருக்கவில்லை. ஆருயிரப்படி முதல் எல்லாவியாக்கியானங்களிலும் ஏகரீதியாக "உன்னுடைய அழகிய திருக்கைகளை அடியோங்களுடைய தலையிலே வைத்தருளித் திருக்கண்களாலே குளிரப்பார்த்தருளாய்" என்று சுவைமிக்க பொருளை யருளிச்செய்திருக்க, இந்த ரஸகனமான பொருளை ச்லோகத்தில் அடக்க முடியாமல், ஆழி யென்பதற்கு சக்கரமென்று பொருள்கொண்டு "சக்ரராஜாயுத த்வாத்" என்ருர் தாத்பர்யரத்னுவலியில். * நற்பாலயோத்தியில்வாழும் சராசாம் முற்றவும் நற்பாலுக் குய்த்தனன்* என்றவிடத்தில் வாதிகேஸரி ஜீயருரையை அடியொற்றினபடி காட்டியிருக்கிரோம். இவை தேசிகன்மீது தோஷாரோபணமாக எழுதுமவையல்ல; நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களைக் கைவிளக்காகக் கொண்டே தேசிகன் அருளிச்செயற்பொருள்களை அறிவிக்கின்ருரென்பதைக் கல்வெட்டாக்குகிறபடியே யொழிய வேறில்லை. நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களில் இல்லாமல் ஆருயிரப்படியில் மட்டுமுள்ளதான ஒரு அர்த்தமும் தேசிகஸூக்தியில் காட்டமுடியாதென்பதும், தேசிகனுக்கு ஆருயிரப்படி கிடைக்கவேயில்லை யென்பதும், ஆருயிரப்படியென்று ஒன்று இருந்ததாகக்கூட தேசிகன் அறிந்திருந்ததில்லை யென்பதுமே நமது நிருபணஸர்வஸ்வம். ... *

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானுர்ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியரியற்றிய

# பூதிகந்திபுஷ்பப்ரஹஸனம்.

ஸெவஜ்ஞஸாவ௯ஹௌஜாய சிங்கப்பெருமாள் ஸூஷ்யாய விஷ்ணவே ।
ஸத்தஉநாவிஜயநுஸநு ஸகஞாநு ஶகஷீகஶோ௨ ஊவஹாஊாநு ॥

— முகவுரை —

ஸமீப காலத்தில் ஒருநாள் நாம் சென்னைக்குச் சென்றிருந்த போது ஒரு பாகவதர் ஒரு சிறு புத்தகத்தைக் கொணர்ந்து நம்மிடம் கொடுத்து இதைக் கடாக்ஷித்ததுண்டோ? என்று கேட்டார். பார்த்துச் சொல்லுகிறேனென்று முகப்பை நோக்குகையில் 1961 ஆம் வருடத்தில் பதிப்பித்ததாக முன்னங் கண்டோம். மற்றுமுள்ள வரிகளையுங் கண்டபோது—"பாரிஜாத புஷ்பும் (என்கிற) ப்ரபந்தஸாரவைபவம். —ப்ரபந்தஸாரதத்த்வஸாரம் முதலியவற்றுக்கு மறுப்பு— பண்டிதராஜ திருவரங்கம் திருமலைதாதாசாரியர் எழுதியது." என்னும் வரிகள் காணப்பட்டன. "இதைக் கடாக்ஷித்ததுண்டோ? என்றவர்க்கு நமது விடை;—

'இதில் மறுக்கப்பட்டதாகக் காட்டப்பட்ட "ப்ரபந்தஸாரதத்வஸாரம்" என்கிற நூல் பல்லாண்டுகட்கு முன்பு நானெழுதியது. அப்போது சிலர் மறுப்பெழுதத்தொடங்கி உடனுக்குடனே பங்கமடைந்து ஓய்ந்தொழிந்தனர். இது நிகழ்ந்து ஏறக்குறையப் பதினைந்து வருஷங்களாகியிருக்கும். அப்போது மறுப்பெழுதி ஓய்ந்தவர்களில் இந்த D.T. தாதாசாரியரும் ஒருவரே. ஒருவர் என்பதிற்காட்டிலும் தலைவர் என்னத்தகும். பாகவதரே! இப்போது நீர் காட்டுகிற பாரிஜாத புஷ்பமென்கிற இந்தச்சுவடி இதுகாறும் என் கண்ணில்பட்டதில்லை. பட்டிருந்தால் அந்த க்ஷணத்திலேயே பொடி பொடியாகியிருக்குமல்லவா? இது 1961ல் அச்சிட்டதாகக்காண்கிறது. இதைப் பற்றி இரண்டு விதமாக ஊஹிக்கிறேன். இதைச் சில நாட்களுக்கு முன்பு அச்சிட்டுவிட்டுப் புராதனமென்று காட்டுவதற்காகப் பழைய வருஷத்தைக்

குறிப்பிட்டிருக்கலாம். அல்லது, ஒன்பது வருடங்களுக்கு முன்னமே அச்சிட்டிருந்து, அப்போதே வெளியிட்டால் அன்றே மாய்ந்தொழியுமே; சில காலமாவது ஜீவித்திருக்கட்டுமே, சிலபாமரர்களாவது சில நாட்களாவது மயங்கிக் கிடக்கட்டுமே என்றெண்ணி குப்தப்ரசாரம் செய்திருக்கலாம். வ்ருச்சிக தந்தசூகாதிகள் என்றேனும் ஒருநாள் வெளியில் தலை காட்டுவது மாண்டொழிவதற்கேயாதலால் ... .... ஆகவேண்டியது இன்றேயாகும்''— என்பதாம்.

ப்ராமாணிகங்களான விஷயங்களிற்புகுந்து சுவைமிக்க விமர்சங்களைச் செய்து வாசகர்களை யுகப்பிக்க சக்தியற்றவர்கள் சில நிந்தைக்கந்தைகளை வெளியிட்டு க்ருதக்ருத்யர்களாய் த்ருப்தியடைவது வழக்கமாகையாலே இதுவும் அத்தகைய கந்தைகளில் ஒன்ருகத்தானிருக்க வேண்டுமென்று நிச்சயித்து உள்ளே பார்க்கத்தொடங்கினேன். இத்தகைய கந்தைகளை நாம் எவ்விதமாகப் பார்க்கிற வழக்கமென்ருல், *ஆதிநடுவந்திவாய்* என்று ஒராழ்வார் ஸாதிக்கிற கணக்கிலே முதலிலும் இடையிலும் முடிவிலும் சில பக்கங்களை முன்னம் பார்த்துவிட்டு, பிறகு ஆநுபூர்வியாய்ப் பார்ப்பது வழக்கம். அதே ரீதியில் இதையும் பார்த்தபோது, அந்யதாஜ்ஞான விபரீத ஜ்ஞான விப்ரலிப்ஸாதிகளாகச் சொல்லப்படுகிற புருஷதோஷங்கள் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் வரிதோறும் எழுத்துத்தோறும் காட்டிக்கொண்டிருக்கின்ற இச்சுவடி இத்தனை நாள் ஜீவித்திருந்ததே உலகுக்கு அரிஷ்டம்; இனிமேலும் ஜீவித்திருந்தால் லோகக்ஷோபமே யாகும்; ஆகவே இதை விரைவில் நீருக்கித் தொலைக்க வேணுமென்று தோன்றிற்று.

ப்ரக்ருதம் நாம் லோகோபகாரமான க்ருத்ய சதஸஹஸ்ரங்களில் ஈடுபட்டிருக்கையாலே இதில் கைவைத்து அருமந்த அவகாசத்தைப் பாழே போக்க வேணுமா? என்கிற ஆலோசனையுமுண்டாயிற்று. நாம் செய்யும் லோகோபகாரங்களில் இது தலையானதாகவே மநீஷிகளால் மதிக்கப்படுமென்றறுதியிட்டு இதைத் தலையான தொண்டாகவெண்ணி நிறைவேற்றுகிறேன். உலகில் ப்ராஜ்ஞர்கள் தாம் கண்டிக்க எடுத்துக்கொள்ளும் நூல்களில்–தொலையட்டுமென்று விட்டிடக் கூடிய விஷயங்களும் சில இருப்பதுண்டு. ஆனால் இப்போது நாம் மறுக்கக்கொண்ட சுவடியில் அத்தகைய விஷயம் ஒன்று கூட இல்லை யென்பது ஸ்பர்த்தையினுல் சொல்லுமதன்று. ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம். இனி விஷய சர்ச்சைகளில் வியாபரிக்கிருேம் சாஸ்த்ரபத்ததிக்கோ ஸம்ப்ரதாயஸரணிக்கோ இணங்கின பேச்சு ஒன்றிரண்டாவது ப்ரதிபக்ஷியின் சுவடியில் இடம் பெற்றிருக்குமானுல் "விஷய சர்ச்சைகளில் வியாபரிக்கிருேம்'' என்று நெஞ்சு குளிர எழுதலாம்; அதற்கோ ப்ரஸக்தியில்லை. நாம் எதைப்பற்றிக்கொண்டு எழுதினுலும் அதில் ப்ராஜ்ஞர்களுக்குப் பரம போக்யமாகப் பல விஷயங்கள் கிடைத்தே தீருமாதலால் அதை முக்கியமாகக் கருதியே எழுதலாகிறது. இவரைப்பற்றி நாம் 15 வருடங்களுக்கு முன்பு எழுதியிருந்த வொரு தத்துவத்தை இங்கு நினைவூட்டுகிறேன்.

சென்னையில் மிகவும் ப்ரக்க்யாதராயிருந்த (Late) ப்ரஹ்மஸ்ரீ T. R. ராமசந்திரய்யரவர்களை அறியாதாரில்லை. அவர் தம் வாயினுல் சொல்லக்கேட்ட அவர் விஷயமொன்று கேண்மின்; அவர் மிகவும் பிராமாணிகராகையாலே தம் மனதில்

'இது தப்புக்கேஸ்' என்று பட்டுவிட்டால் லக்ஷம் ரூபாய் பீஸ் கிடைப்பதாயிருந்தாலும் அதை ஏற்றுக்கொள்ளமாட்டாராம். அப்படிப்பட்டவரிடத்தில் ஒருவர் முழுப்பொய்யான வ்யவஹார மொன்றைக் கொணர்ந்து கொடுத்து இதைத் தாங்கள் நடத்தித் தரவேணுமென்று கோரினராம். அவர் ஆராய்ந்து பார்த்து இது சிறிதும் நியாயமில்லாதது என்று தெரிந்துகொண்டு மறுத்து விட்டாராம். ஆனாலும் பிரபல தாக்ஷிண்ய நிர்ப்பந்தாதிகளினல் அதை அவசியம் தாம் ஏற்றுக்கொள்ள நேர்ந்துவிட்டதாம், ஆனாலும் 'ஒரே ஒரு நாள் ஒரு மணி காலம்மட்டும் ஜட்ஜ் முன்னிலையில் பேசுவேன்' என்ருராம். 'ஒரு மணி காலங்கூட வேண்டாம்; அரை மணி கால் மணி பேசினாலும் போதும், இந்த கேஸில் தங்களுடைய ஸம்பந்தமிருக்கிறதென்று ஜட்ஜ் தெரிந்து கொண்டால்போதும்' என்ருர்களாம். ஒரு நாள், கேஸ் ஆர்க்யுமெண்டுக்கு வந்துவிட்டதாம். இவர் கட்டைத் தொட்டுப் பார்க்கவுமில்லையாம். அந்த கேஸில் நாற்பது பேர்கள் பிரதிவாதிகளாம். அவர்களுடைய பெயர்களை வாசிப்பதும், அவர்கள் இன்னவூர் இன்னதெரு, கதவிலக்கமின்னது, தகப்பனர் பெயர் இன்னது, வயது இன்னது தொழில் இன்னது...என்று இதையெல்லாம் வாசிப்பதும் விளக்குவதுமாயிருக்கிருராம். மணியோ போய்க்கொண்டேயிருக்கிறது. ஜட்ஜ்க்கு விஷயம் புரிந்துவிட்டது. மேல் விஷயமிருக்கட்டும்

அதேபோல சிலர் இவரை நிர்ப்பந்தித்து ஆளாக்கினர்கள். இவர்க்கோ விஷயங்களில் புகுந்து எழுதச் சரக்கில்லை. எதையாவது எழுதித் தொலைக்க வேண்டியதாயிற்று. இவர் போது போக்கின விஷயங்கள் வேறு. ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளில் விலைசெல்லத் தகுதியான ப்ரமாணப்ரமேயங்களைப் பெய்வதற்கு பாக்யம் பண்ணிற்றிலர். அதை நன்கு மூதலிக்கும் வகையிலேயே தமது சுவடியை யெழுதியுள்ளாரென்பது வெட்ட வெளிச்சமாகிறது. .... .... *

முகவுரை முற்றிற்று.

— ப்ரதிபக்ஷிச்சுவடியின் தன்மையுணர்த்தல் —

1. பூதிகந்திச் சுவடியில் முக்கால் பாகம் நிரம்பியுள்ள திவ்யஸ்ரீஸூக்திகள் எப்படிப்பட்டவையென்ருல்—"இது உளறுகிறது, இது பிதற்றுகிறது, இந்த துர்மதி—இந்த குடிலமதி—இந்த குத்ஸிதம்—இந்த உன்மத்தம்-இப்படி நூற்றுக்கணக்கான அபசப்தங்களை ஏடு தோறுங் காணலாம். தேசிகன் "பரிமித குணே ஸ்பஷ்டாவத்யே முதா கிமுதாஸதே" என்றபடிக்கு மிகச்சேருமிது. துர்ப்பாஷித ஸஹஸ்ரமொழிய ஸுபாஷிதலேசமும் கற்றறியாதார்க்கு இது ஸஹஜந்தானே. இத்தகைய துருக்திகளில் நாம் லவலேசமும் கண்செலுத்தோம்; இவர் தாம் விப்ரலம்ப மடைந்ததோடு நில்லாமல் பிறரையும் வஞ்சிக்கும் விஷயங்கள் பலவுண்டே இவரது சுவடியில், அவற்றை முந்துற முன்னங் காட்டிவிட்டு, இவர் முழுமோசக்காரர் என்று உலகமெல்லாம் உள்ளபடியுணரச் செய்துவிட்டு மேல் விஷயங்களிற் செல்லுகிறேன்.

— தேசிக நூல்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை ஸூக்திகளே அவலம்பம் —

2. தேசிகன் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளைப் பற்றுக்கோடாகக் கொண்டே தமது நூல்களில் பலபல விஷயங்களைப் பொறித் திருக்கின்ருரென்பதை நான் நாற்பது வருஷங்களுக்கு மேலாகப் பல நூல்களி லெழுதி. இதன்மேல் தோன்றிய துர்வாதங்களையும் உடனுக்குடனே வேரறக் களைந்து, நான் கண்ட உண்மையை நிலைநாட்டி யிருக்கிறேனென்பதை உலக மறியும். அப்படி நிலை நாட்டிய நூல்கள் வடமொழியிலும் தென்மொழியிலும் இற்றைக்கும் விளங்குவன. தேசிகனருளிய த்ரமிடோப நிஷத் தாத்பர்யரத்நா வளியிலும் ஸாரத்திலும் பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளை உபஜீவித் திருக்கும்படியை விபுலமாக வெடுத்துக்காட்டி நிரூபித்தபோது திருவாய்மொழி முதற்பத்தில் 8, 9, 10 ஆகிய மூன்று பதிகங்களை முக்கியமாக எடுத்துக்காட்டி, இவற்றுக்கு "பிள்ளானுடைய ஆருயிரப்படியில் அருளியப்ரமேயம் வேறு; நம் பிள்ளை திருவடிகள் அருளிய ப்ரமேயம் வேறு" என்பதையும் விளக்கிக்காட்டி, தேசிகன் பிள்ளானருளிய ப்ரமேயங்களைக் கொள்ளாமல் பெரியவாச்சான் பிள்ளை யருளிய ப்ரமேயங்களையே ஆதரித்து ச்லோகங்கள் இயற்றியுள்ளார் என்று விளக்கியிருக்கிறேன்; இது என்னுடைய அவிசால்யமான நிருபணம் "வாஸு தேவக்ருஹம் த்வேகம் ந ப்லாவயதி ஸாகர:" என்ருப்போலே இந்த நிருபணத்தை ப்ரளயவெள்ளமுங் கொள்ளாது என்பது உத்த்ருத்ய புஜமுச்யதே.

— பிரதி பக்ஷியின் பச்சைப்பசும்பொய்யான அநுவாதத்தைக் காட்டுதல் —

3. ப்ரக்ருதம் இவ்விஷயத்திற்கு மறுப்பெழுத ஆசைகொண்டு கிளர்ந் தவர் தமது சுவடியில் (பக்கம் 63ல் கடைசியில்) 55 என்று லக்கமிட்டு, முதலில் என்னுடைய நிருபணத்தை அநுவதித்து, உடனே தன்னியல்வின்படி நிந்தைக் கந்தையை வளர்த்தியிருக்கின்ருர். அவ்விடத்துள்ள பூதிகந்தி பங்க்திகளை அப்படியே எழுதுகிறேன்; (அநுவதிக்கிறேன்.)

"55 இங்கு திருவாய்மொழி (1-9) *இவையுமவையும் பதிகத்தில் எம் பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத்மிக்க ஸாத்மிக்கக் கொடுத் தருளினதாக ஆருயிரப்படியிலன்றிக்கே) பெரியவாச்சான் பிள்ளை அவதாரிகை இட்டருளினர், அதை யநுஸரித்து தேசிகன் *ஸாத்ம்ய போகப்ரதாநாத்* என்றருளிச்செய்தார்' —என்றது அஜ்ஞானத்தினுலா? வெறும் வஞ்சனையைக் கருதியா? என்பது விளங்கவில்லை. (இங்கே ஆருயிரப்படியிலுள்ள அவதாரிகை யாவது—) " ஆர்ஜவகுணுநுஸந்தானம் பண்ணின தம்மிடத்தில் ஈச்வரன் ஸாத் மிக்க ஸாத்மிக்க ஸர்வாவயவஸம் ச்லேஷம் பண்ணின அநுபவரஸத்தையருளிச் செய்கிருர்" என்பது (என்றெழுதிவிட்டு, இதற்குமேலும் எழுதுவதாவது—) "தேசிகன் ஸ்ரீபாஷ்யவிரோதம் மலிந்த, தாம் பரிஷ்கரிக்க வேண்டியதாயிருந்த ஒரு நூலை [அதாவது. பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தை] காலக்ஷேப க்ரந்தமாகக் கொண்டாரென்பது சிறிது ப்ரஜ்ஞையுள்ளவன் சொல்லக்கூடிய வார்த்தை யன்று." என்பதாக.

## — நமது பிரபலமான சபதமொன்று —

4. தடஸ்தர்களான மஹான்களை நோக்கி விஜ்ஞாபிக்கிறேன். நாற்பது வருஷமாக,(இவரோடு இருபது வருஷமாக) நடந்துவரும் விவாதம் இன்றோடு முடிவு பெற்றதென்று கொள்க. தீவிரமான சபதம் செய்கிறேனிப்போது. உண்மையறிவாளிகளும் உண்மையுணர விரும்புமவர்களும் அவதானங்கொள்ள வேணுமிங்கு.

நான் உலகத்தை வஞ்சித்து வருவதாக அடிக்கடி யெழுதி வருகிறாரிவர். இவருடைய வஞ்சனையை இங்குச்சில விஷயங்களைக் கண்ணாடிபோல் காட்டி மூதலிக்கிறேன். மேலே நானெடுத்துக் காட்டிய இவருடைய வாக்கிய ராசியில் *இவையுமவையும் பதிகத்திற்கு ஆறாயிரப்படி யவதாரிகையென்று இவர் எடுத்தெழுதியிருப்பதாவது "ஆர்ஜவகுணாநுஸந்தானம் பண்ணின தம்மிடத்தில் ஈச்வரன் ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸர்வாவயவ ஸம்ச்லேஷம் பண்ணின அநுபவ ரஸத்தை யருளிச்செய்கிறார்." என்பதாக. வஸ்துஸ்திதியில் இப்படியொரு அவதாரிகை பிள்ளான் அருளிச்செய்திருந்தால்— (மேலே கேளுங்கள்)

இந்த விவாத விஷயமாக மட்டுமன்றிக்கே மற்றும் பல பலவிவாதங்கள் விஷயமாகவும் லோகாபிராமமாகவும் ஸம்ஸ்க்ருதத்ராவிட நாநா க்ரந்த வ்யாக்யான ரூபமாகவும் இதுகாறும் நானெழுதி யச்சிட்டு வெளியிட்டிருக்கிற எண்ணூறு நூல்களையும் மயிலையில் வந்து பல மஹான்களின் முன்னிலையில் கிழித்தெறிந்து விட்டு அவ்விடத்திலேயே தொண்டர் தொண்ட' தொண்டனாயிருந்து ஆயுச்சேஷத்தைக் கழிக்கக்கடவேன். P.B.A.

பிள்ளானருளிச் செய்த ஆறாயிரப்படியானது மற்றும் பல வியாக்கியானங்களோடு சேர்ந்தும், தனிப்படவும் தமிழ் லிபி தெலுங்கு லிபி ஆகிற இரண்டு லிபிகளிலும் பன்னிரண்டு பதிப்புக்கள் ஏறியுள்ளன. என் கண்ணில் பட்டவை இவ்வளவு. கண்ணில் படாதவை இன்னமுமிருக்கலாம். முதன் முதலாக அச்சேறினது August 1871 இற்றைக்கு ஏற்றத்தாழ்வின்றியே தொண்ணூற்றிரண்டு வருஷங்களாயின. அதன் பிறகு 1921ஆம் ஆண்டு வரையில் பதிப்புகள் பல நடந்திருக்கின்றன. 1913ஆம் வருஷத்தில் ஆறாயிரப்படி மட்டும் தனிப்பதிப்பாக மைசூர் ஸ்ரீபரகாலமடத்தின் மூலமாக (தெலுங்கு லிபியில் வெளிவந்துள்ளது. ஆக இப்பதிப்புக ளெல்லாவற்றிலும் *இவையுமவையும் பதிகத்தின் ஆறாயிரப்படி அவதாரிகை-- "இப்படி யெம்பெருமானென்னோடு ஸம்ச்லேஷித்தருளினானென்கிறார்." என்றிவ்வளவே யொழிய இதற்குமேல் ஓரெழுத்தும் கிடையாது. ஓரக்ஷரமுங்கிடையாது. அனைவரும் தம் தம்மிடமுள்ள ஸ்ரீகோசங்களை யெடுத்து ஸேவிக்கலாம், இவர் காட்டுகிற "ஆர்ஜவ குணாநுஸந்தானம் பண்ணின" இத்யாதி வாக்யம் ஒன்றிலும் கிடையாது. பொய் வஞ்சனை மருள் இருள் துயக்கு மயக்கு

2

ஆகிய எல்லாவற்றுக்கும் கொள்கலமானவிவர் ஏதோ க்ருத்ரிமம் செய்கிறபடி இது. இதைச் சிறிய விஷயமாக நினையாதீர்கள். மிகப் பெரிய விஷயம்.

— மேலே குறித்த நமது ப்ரபல சபதத்தின் தொடர்ச்சி. —

5. *ஓடும் புள்ளேறிப் பதிகத்தில் ஆர்ஜவ குணாநுபவமென்பதை பிள்ளான் நெஞ்சிலும் நினையாதவர். நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களில் மட்டுமே இந்த நிர்வாஹமுள்ளது. இதையே தேசிகன் ஆதரித்து ச்லோகம் பண்ணி விட்டார். தேசிகபக்தம்மந்யராயிருப்பவர்களுக்கு இதனால் மிக்க தலை வணக்கமுண்டாயிற்று. இத்தகைய பல விஷயங்களில் இதுவொன்று. இவருடைய வகுப்பில் திருவாய்மொழிக்கு உரையெழுதப்புகுந்தவர்கள் இதை நோக்கினார்கள். மநஸா வாசா தேசிகனைக் கடிந்தார்கள். "பிள்ளானோ, எம்பெருமானுடைய ஐச்வர்யம் சொல்லுகிறது என்றார்; தேசிகனோ நமக்கு வேண்டாத ஆசாரியர்களை யடிபணிந்து ஆர்ஜவம் சொல்லுகிறதென்கிறார். இதற்கென்ன பண்ணித்தொலைக்கிற" தென்று பார்த்தார்கள். "இப்படி ஆர்ஜவசபளித திவ்யைச்வர்யத்தை யநுஸந்தித்த வாழ்வார்" என்றெழுதி ஒருவாறு துயர் தீர்ந்தார் பரகாலஸ்வாமி. (ஆர்ஜவ சபளித) என்றால் என்ன அர்த்தமோ! அவரைத்தான் கேட்கவேண்டும். ஆர்ஜவத்திற்கும் ஐச்வர்யத்திற்கும் என்ன ஸம்பந்தமோ? அது தொலையட்டும். ஸமீப காலத்தில் பரகாலயதீந்த்ரக்ரந்தமாலாயாம்—ப வத்விஷயம் என்று அச்சிட்ட பரகாலமடம் "துணிந்த கட்டைக்கு துக்கமில்லை" என்று கொண்டு துணிந்து *ஓடும் புள்ளேறி* இவையுமவையும் என்கிற இரு திருவாய்மொழிகளினுடையவும் ஆறாயிரப்படியையே உருமாற்றி விட்டது. *ஓடும் புள்ளேறியாறாயிரப்படியில் 'ஸ்வரூப மான ஆச்ரயணமுடைய ஈச்வரன் கரணத்ரயத்தாலும் கிட்டமாட்டாத சேதநரிடத்தில் ஆர்ஜவ குணத்தோடே ஆச்ரித ஸம்ச்லேஷம் பண்ணிக்கொண்டிருப்பானென்று அருளிச்செய்கிறார்" என்றும், *இவையுமவையுமாறாயிரப்படியில் இப்போதிவர் காட்டும் வாக்யத்தையும் ப்ரக்ஷேபம் பண்ணிவிட்டது. இங்ஙனே ப்ரக்ஷேபித்து அச்சிட்டது 1941ல். பிறகு 1943ல் அந்த மடமே ஆறாயிரப்படியை மட்டும் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறது. முன்பு ப்ரக்ஷிப்தமானது அதில் உத்க்ஷிப்தமாய் விட்டதென்பதைக் கண்ணுடையார் காணலாம். குருகுல வாஸம் பண்ணியறியாத இவர் இது ஸங்கதமா அஸங்கதமா என்று கூட ஆலோசிக்கமாட்டாமல் தன்னுடைய மருளை நம்மீதேற்றி அட்டஹாஸம் பண்ணுவதை ஆராய்ந்து புடைக்க ஆருமில்லையா?

— இனி ப்ரஹாரமே கர்த்தவ்யமென்று கொண்டார் D. T. T. —

6. எழுதுகிறாரிந்த பண்டிதராஜர் (பக்கம் 126ல்) இனி இந்த குடிலமதி ஏதாவது கோணலாக ஒன்று கூறமுயலும்; அதற்குப் பலனை ப்ரஹாரங்களையும் பெற்றுக் கொள்ளும்"—என்று. வாக்விஹாரத்தாலே வெற்றி பெறமுடியாதென்று திண்ணமாக வெண்ணி கரப்ரஹாரமே தஞ்சமென்று துணிந்து விட்டார் பாவம்! "ஹே ஸத்ரத்ந! தவைததேவ குலசம்....சூர்ணீக்ருதம் நாச்மநா" என்றான் ஒரு மஹாகவி. நாம் இவரது துர்வாதங்களை சூர்ணீகரித்ததால் ஆத்திரம் தாங்கமாட்டாதவிவர் ப்ரஹரித்துத் தானே க்ருத க்ருத்யராகவேணும். தாராளமாக ஆகுக; ஸர்வாங்கங்களையுங் காட்ட ஸித்தமாயிருக்கிறோம்.

— விட்டுசித்தனும் விட்டுணுசித்தனும் —

7. இன்னொரு வேடிக்கையைக் கேளுங்கள். D. T. T. எழுதுகிருர் (பக்கம் 125ல்)—பெரியாழ்வார் தம்பெயரை எங்கும் விட்டுசித்தன் என்றே குறிக்கிருர்; *நாவ காரியத்தில் மட்டும் விட்டுணுசித்தன் என்று காண்கிறது. ஆகையாலே இது ஆரோ அறியாத வொருவன் எழுதிச் சேர்த்ததென்று சொல்லித் தீரவேண்டும். என்று; சிறிதும் கண்ணில்லாமலும் ஆர்ஜவமில்லாமலும் இப்படி யெல்லா மெழுது கிற வொரு வ்யக்தியை எதிரியாக்கி நாமெழுத வெள்கவேண்டாமா? தேசிகன் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "நிஜமுகதோஷம் நிர்மலேஷ்வபி தர்ப்பணேஷு ஸமர்ப்பயந்தி" என்று பணித்தது தான் நினைவுக்கு வருகிறது; இதெல்லாம் நம்முடைய ப்ரபந்த ஸாரதத்வ ஸாரத்திற்கு ப்ரபல கண்டனமாம். இந்த வித்வானுக்கு எந்த விதத்திலும் குருகுலவாஸம் ஸர்வாத்மநா அப்ரஸக்தமென்பது ஸுப்ரஸித்தம். திருச்சந்த விருத்தம் நூற்றிருபத்தாறு பாட்டு என்றதற்கு மேலே இதுவொரு அபப்ரம்சம். திவ்ய ப்ரபந்தங்களுக்கு அபத்தப்பதிப்புகளும் சிலவுண்டு; அவற்றிலும் காணக்கிடைக்காத அபத்தமன்ரோ இவர் காட்டும் 'விட்டுணு'. நாவகாரியமென்கிருர்; நா அ காரியம்; நாவுக்கு அகார்யம். அது தான் இவர்க்குத் தெரியுமேயொழிய (அதற்கடுத்த பாசுரம்) குற்றமின்றிக்குணம் பெருக்கிக் குருக்களுக்கனுகூலராயிருக்க எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் தெரியாதே! ஒரு ஸபையைத் தானே கூட்டி அந்த சபையில் *நாவகாரியநிகமனப் பாசுரத்தில் (விட்டுணுசித்தன்) என்றிருப்பதைக் காட்டி அங்குச்சேரும் மஹான்களையாவது உகப்பிக்கட்டும். அதற்கு வழி ஏது?

— பெரியவாச்சான் பிள்ளையும் தேசிகனும் —

8 (பக்கம் 83ல்) ஒரு கதை எழுதுகிருர்;— தேசிகர் சில பரிஷ்காரங்கள் செய்தாராம். அந்த பரிஷ்காரங்களெல்லாம் யுக்தமென்று அங்கீகரித்து ஆமோதித்தாராம் பெரியவாச்சான் பிள்ளை; ஆமோதித்து ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு முக்கியமான ப்ரபத்தி விஷயத்தில் தமக்கு நிஷ்கர்ஷம் உண்டாம்படி ஒருக்ரந்தம் ஸாதிக்க தேசிகனை ப்ரார்த்தித்தாராம்; தேசிகன் அந்த ப்ரார்த்தனையை ப்ரணதிசாலிநா மௌலிநா ஸ்வீகரித்து ந்யாஸவிம்சதியையும் சுருக்கமாக அதற்கொரு வியாக்கியானத்தையும் ஸாதித்தருளியாச்சாம். இதற்கு என்ன ப்ரமாணமென்ருல் அந்த வியாக்கியானத்தில் (ஶ்லோ அயா) *ஸதிச்சயா* என்றிருப்பதும், (ஸத்) என்று பெரியவாச்சான் பிள்ளைக்கே ப்ரஸித்தியிருப்பதுமாம் இப்படியொரு ஏகாந்த ஸம்ப்ரதாயார்த்தம் எழுதியுள்ளார். இதை நாம் மிக மிகக் கொண்டாடுகிரோம். இக்கதை அப்ரஸித்தமாயிருந்தாலும் இதில், தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளில் கொண்டிருந்த ப்ராவண்யாதிசயம் நன்கு விளங்குவதனுல் இது ஸம்பாவிதமான கதையே யென்று கொள்வோம். விளங்கின ப்ராவண்யாதிசயம் என்னென்னில்; ஸாரமான விதனை உற்று நோக்குமின்;

— ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே —

9 அந்த ந்யாஸவிம்சதியில் ஆசார்யலக்ஷணம் சொல்லுகிற *ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே *என்கிற ச்லோகத்திலும்; சிஷ்யலக்ஷணம் சொல்லுகிற *ஸத்புத்

திஸ் ஸாது ஸேவீ* என்கிற ச்லோகத்திலுமுள்ள ஸச்சப்தம் [உபக்ரமோபஸம் ஹார ஸாத்குண்யாய] பெரியவாச்சான் பிள்ளையையே குறித்ததாக வேண்டும். ஆசார்யன் எப்படியிருக்கவேணு மென்றால் [ஸத்ஸம்ப்ரதாயே ஸித்தம்] ஸத்தென்று ஜகத்ப்ரஸித்தரான பெரியவாச்சான் பிள்ளையின் ஸம்ப்ரதாயத்திலே ஸுசிக்ஷிதரா யிருக்கவேண்டும்—என்கிறார் தேசிகன். அடுத்த சிஷ்யலக்ஷணசிக்ஷண ச்லோகத் திலும் 'ஸத்புத்தி: ஸாது ஸேவீ* என்கிறார். ஸதி புத்தி: யஸ்ய ஸ:— ஸத்புத்தி:. ஸதியென்றது ஸப்தம்யந்தம். ஸத்தென்று ப்ரஸித்தரான பெரியவாச்சான்பிள்ளை யினிடத்திலே என்றபடி. புத்தி யென்பது அடுத்த பதம்; * புத்திர் மநீஷா திஷணு தீ: ப்ரஜ்ஞா சேமுஷீ மதி: * என்ற அமரகோசத்தை நினைப்பது. எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யமங்கள ச்லோகத்தில் "சேமுஷீ பக்திரூபா" என்றருளிச் செய்தது தேசி கனுடைய திருவுள்ளத்தில் ஊறியிருக்கு மென்னத்தட்டில்லையே. ஆக (ஸத்புத்தி:) என்பதற்கு—பெரியவாச்சான் பிள்ளை பக்கலில் பக்தி ரூபமான புத்தியையுடைய ஞக இருக்கவேணும் சிஷ்யன்—என்பதும். அப்படிப்பட்ட சிஷ்யனுக்கே உபதே சிக்க வேணுமென்பதும் தேசிகனுடைய ஸித்தாந்தமாகத்தேறி நின்றது. பெரிய வாச்சான் பிள்ளையை தேசிகன் நேரில் ஸேவித்து உஜ்ஜீவிக்க பாக்யம் செய்தில ராகிலும் அவருடைய திருவடிகளில் தேசிகனுக்கிருந்த ப்ராவண்யம் அப்ரதிமம் அப்ரமேயம் அந்யாத்ருசம் என்பதை விஸ்தரபீதியின்றிக்கே விவரிப்பதற்காகவே அடியேனுடைய இந்த க்ரந்தம் அவதரிக்கின்றதென் பதை, இதுதன்னை *ஆபாத சூடமநுபூயப்படியே ஆமூலாக்ரம் காண்பவர்கள் எளிதாக வுணருவர்கள். அந்த விஷயம் க்ரமேண வரும். இப்போது நாம எடுத்துக்கொண்ட சர்ச்சையின் உபக்ரமத்தை ஸஹ்ருதயர்கள் மறவாமல் நினைவுறுத்திக் கொள்ளவேணும். நாமே நினைவுறுத்துகிறோம் தேசிகோக்தி களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை ஸூக்திகளே அவலம்பமென்று நாம் மூதலித் திருந்ததை ஸஹிக்கமாட்டாத இந்த D. T. T. மஹான் "பிள்ளானுடைய ஆரு யிரப்படியை அடியொற்றியேதான் தேசிகன் தாத்பர்ய ரத்னாவலீ ஸாரங்களைப் பணித்தார்" என்றெழுதுகையில் ஆருயிரப்படியில் இல்லாததும் நவீநப்ரக்ஷிப்தமு மான வாக்யத்தை யெடுத்துக்காட்டி பங்கமடைந்தாரென்பதைக் கீழே உபபாதித் தோம். அந்தப்ரகரணத்தில் இவர் எழுதியிருந்ததை மீண்டும் நினைவூட்டுகி றேன்—பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீபாஷ்யவிருத்தமாகப் பல எழுதிவைத்திருப்ப தாகவும், அப்படியுள்ள வற்றை தேசிகன் கண்டித்திருப்பதாகவுமெழுதி அப்படிப்பட்ட அவருடைய இருபத்து நாலாயிரப்படியைத் தாம் காலக்ஷேப க்ரந்தமாக ஒருகாலும் வைத்துக்கொண்டிருக்கமாட்டாரென்று எழுதியுள்ளார். இங்கு நாம் இரண்டு விஷயங்களை முன்னம் ப்ரதிஜ்ஞைபண்ணி அவற்றை உலக மறிய உபபாதிப்போம்.

## — இரண்டு ப்ரதிஜ்ஞைகள். —

10. (1) பெரியவாச்சான்பிள்ளை பிள்ளை லோகாசாரியர் மணவாளமாமுனி கள் ஆகிய இம்மூவரும் ஸ்ரீபாஷ்யஸாகர பாரங்கதர்களாகையாலே இவர்க ளுடைய திவ்யஸூக்திகளில் ஸ்ரீபாஷ்யவிரோத லேசமும் காட்டமுடியாது.

(2) தர்க்கபாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லோமென்று கூசாமல் எழுதியிருப்பவருடைய வாக்குக்களில்தான் ஸ்ரீபாஷ்யவிரோதமும் ஸ்ரீபாஷ்யகார திவ்யஸூக்தி திரஸ்காரமும் புகுந்துகிடக்கிறது.

இவ்விரண்டு ப்ரதிஜ்ஞைகளும் நாம் இப்போது புதிதாகச் செய்கின்றிலோம்; பலகால் செய்தும் பரக்க உபபாதித்துமிருக்கிறோம். அவற்றை நாம் எத்தனை தடவை யெடுத்துக் காட்டினாலும் *அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே யென்றுதான் வித்வான்கள் உகப்பர்கள்; உகந்து வருகிறார்கள். இவ்விரண்டு ப்ரதிஜ்ஞைகளுக்கும் மேல்—நவீனர்களென்று நம்மால் நெடுநாளாக வ்யபதேசிக்கப்பட்டுவருமவர்களின் உக்திகளுக்கும் தேசிகக்ரந்தங்களுக்கும் எவ்விதமான ஸம்பந்தமும் கிடையாதென்கிற ப்ரதிஜ்ஞை ப்ரபலமானது. இந்த ப்ரதிஜ்ஞைகளை யெல்லாம் பரக்க நிரூபிப்போம். வாய்திறக்க வழியில்லையென்று தாமே உணருவர். ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்றும் கவிதார்க்கிக கண்டீரவரென்றும் விருது பெற்ற தேசிகருடைய உக்திகளிலுமா அவத்யமிருக்குமென்று எண்ணுமவர் இதைப் பாராமலேயிருந்து விடுவது பாங்கே. வேதபாஷ்யம் செய்த ஸாயணாசார்யர் பதபாடத்திற்கும் ஔசித்யத்திற்கும் முரணாக பாஷ்யமியற்றியிருக்குமிடங்களை நாமெடுத்துக் காட்டி வேதபாஷ்யபரிசீலன மென்னும் நூலை வெளியிட்டிருக்கிறோம். ஸ்மார்த்த வித்வான்கள் அனைவரும் அதை வாசித்து யுக்தமே யென்கிறார்களே யொழிய யுத்தத்திற்கு வருவாரில்லை. அப்படியே தேசிகோக்திகளில் நாம் காட்டும் அவத்யங்களும் அவரவர்கள் பார்த்துக்கொண்டிருக்கத் தக்கவையேயன்றி மறுவாய் திறக்கமுடியாதென்பதை மீண்டு மீண்டு முரைக்கத் துணிவுடையோம் யாம். விமர்ச நிபுணர்கள் பொறுமையோடு விமர்சிக்கட்டும்; மறுப்பெழுதட்டும்.

ஸ்ரீ பாஷ்யகாரருடைய திருவுள்ளத்திற்கு நேர்விருத்தமாக நிகமாந்தகுரு புத்திபூர்வகமாகவும் பராமாதிகமாகவும், ஸ்வோக்திகளுள் பரஸ்பர விருத்தமாகவும் எழுதியிருப்பவை அனேகம். இவை நம்முடைய நூல்களில் ஸூபிக்ஷமாகக் காணத்தக்கவை. இங்குச் சிலவற்றைக் காட்டுகிறேன். சாஸ்த்ரஜ்ஞராகத் தம்மைச் சொல்லிக் கொள்ளுகிறவிவர் காலதாமதம் செய்யாமல் கைவலி காட்டுக.

— D. T. T. மஹான் தாழாதே விடையிறுக்கட்டும். —

11. சாரீரகமீமாம்ஸையில் கர்த்ரதிகரணமும் பராயத்தாதிகரணமும் சேர்ந்தாப்போலிருக்கிறது. முந்தின அதிகரணம் ஜீவாத்மாவைக் கர்த்தாவென்று நிலையிட்டது. பிந்தின அதிகரணம் அந்த கர்த்ருத்வம் பரமாத்மாயத்தமென்று அறுதியிட்டது. *ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோந்தர:. ஆத்மாந மந்தரோ யமயதி

*அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநா நாம் ஸர்வாத்மா* இத்யாதி ச்ருதிகளில் பரமாத்மாவானவன் ஜீவாத்மாவை அவ்வோகருமங்களில் ப்ரேரிப்பவனாகத் தெரியவருவதால் ஜீவாத்மாவுக்குச் சொன்ன கர்த்ருத்வம் பரமாத்மாவின் ப்ரேரணாதீனமென்று ஸித்தாந்திதமாயிற்று; இங்ஙனே கொண்டால் [ஜீவாத்மாவின் கர்த்ருத்வம் பரமாத்மாதீனமென்று கொண்டால்] விதிநிஷேத சாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாக வேண்டிவருமே; நிக்ரஹாநுக்ரஹங்கள் ஜீவாத்மாவுக்கு இல்லையாகுமே! என்கிற ஆசங்கை நிற்கிறது; இதைப் பரிஹக்க *க்ருதப்ரயத்நாபேக்ஷஸ் து விஹிதப்ரதிஷித்த அவையர்த்த்யாதிப்ய:* என்று அடுத்த ஸூத்ரமவதரித்தது. ப்ரதமப்ரவ்ருத்தியில் ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்த்ர்யமும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் மட்டும் பரமாத்ம பாரதந்த்ர்யமும் கொள்ளப்படுகையாலே விதிநிஷேத சாஸ்த்ரங்களுக்கு வையர்த்த்யமில்லையென்று சங்காபரிஹாரம் செய்ததாயிற்று. ஆக சாரீரகமீமாம்ஸா நிஷ்கர்ஷம் எத்தகைத்தாக முடிந்ததெனில்; பரமாத்மாவுக்கு ஸாக்ஷித்வம் அநுமந்த்ருத்வம் ப்ரேரகத்வம் என மூன்றுகாரங்களுண்டு. ஸாக்ஷித்வமென்பது உதாஸீநத்வம். ஜீவனுடைய ப்ரதமப்ரவ்ருத்தியில் ஈச்வரனுக்கு ஔதாஸீந்யமேயுள்ளது. த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வம். (அஃதில்லையாகில் ஜீவனுக்கு ப்ரவ்ருத்தியே நிர்வஹிக்கமாட்டாதன்றே.) இனி ப்ரேரகத்வம் எந்த ஸ்தலத்திலென்றால், இதை நம் ஸ்ரீபாஷ்யகாரர் *க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து* இத்யாதி ஸூத்ரபாஷ்யத்தில்—"நந்வேவம் *ஏஷஹ்யேவ ஸாது கர்ம காரயதி ..'' இத்யாதி ஸ்ரீஸூக்திகளால் ஒருங்கவிட்டு ஸர்வஸாதாரணமன்றிக்கே விசேஷ விஷயமென்று நிர்வஹித்தருளினர். இந்த நிர்வாஹம் அநகமும் அநர்க்கமுமானது.

— பாஷ்யக்ரந்தலேசம் காட்டுமாறு D. T. T.யை வேண்டுகிறேன். —

12. ஆக ஜீவனுடைய ப்ரவ்ருத்திகளில் ப்ரதம ப்ரவ்ருத்தியில் (ஈச்வரனுக்கு) ஔதாஸீந்யமென்றும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வமென்றும் தேறிநின்றது. இதை நடாதூரம்மாள் தத்வஸாரத்தில் *ஆதாவீச்வரதத்தயைவ புருஷ: ஸ்வாதந்த்ர்ய சக்த்யா ஸ்வயம்......தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய......*இத்யாதி ச்லோகத்தாலே நன்கு விளங்க வைத்தார். விஷயதத்வமிங்ஙனே யிருக்க *அந்யேந்த்ரகம் புவநமந்யதநிந்த்ரகம் வா கர்த்தும் க்ஷமே கவிரபூத் அயமந்வவாயே* என்று பேசிக்கொண்ட குருஸார்வபௌமர் அதிகரணஸாராவளியில் பராயத்தாதிகரணார்த்த நிர்வாஹத்தில் (ச்லோ. 242) *க்ஷேத்ரஜ்ஞாநாம் ஸமாநா மித்யாதியில் சேதநனுடைய ஸகலப்ரவ்ருத்திகளிலும் ஈச்வரனுக்கு ப்ரேரகத்வம் தாராளமாக வுண்டென்று கூறி, இது பாஷ்ய தீப-ஸார-தத்வஸாரங்களோடு விரோதிக்குமது என்பதைத் தாமே தெரிந்துகொண்டு *பாஷ்யாதி க்ரந்தலேசோபி அவஹித மநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத* என்று ஓங்கி யடித்துவிட்டார். ஸ்ரீபாஷ்யாதிகளை நுட்பமாக ஊன்றி நோக்கினால் அவற்றுக்கு இதுவே அர்த்தமென்று தேறலாம் போ—என்று முடித்திட்டார். ஸ்ரீபாஷ்யாதிகளுக்கு இது கண்டனமே யொழிய இவர் கூறுமர்த்தம் அவற்றில் காணமுடியாதென்பது கல்வெட்டு. "லவணம் என்பதற்கு எருமைச்சாணி யென்றுதான் பொருள்; இப்பொருளை மனத்திற்கொண்டு கோசங்களை ஆழ்ந்து நோக்கினால் இப்பொருள் கிடைத்தே தீரும்" என்பதோடொக்குமிது. அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம்

பஜிக்கும்படியான பாஷ்ய க்ரந்த லேசம் எது? எடுத்துக்காட்டும்' என்றால் திசை தொறும் விழிக்கவேணுமத்தனை. ஆதிசப்தத்தை விட்டிடுவோம்; பாஷ்ய க்ரந்த லேசம் காட்டினால் போதும். வளவள வழவழ வென்று எதையேனும் பேசாதே எழுதாதே ச்ருங்க க்ராஹிகயா பாஷ்யக்ரந்த லேசமே காட்டவேணும். யார்? D.T.T. தத்வத்ரயத்தில் (35). "கர்த்ருத்வந்தானீச்வராதீநம்" என்கிற சூர்ணையின் வியாக்கியானத்தில் விசதவாக்சிகாமணிகள் ஸ்ரீபாஷ்யாதிபஹு ஸ்ரீஸூக்திகளை வெகுவிரிவாக எடுத்துக்காட்டி ஸமந்வயம் செய்தருளியிருக்கும் பரிசைக் காணக் கண்ணில்லையே யிவர்களுக்கு. மாககாவியம் இரண்டாவது ஸர்கத்தில் *அங்காதி ரோபிதம்ருகச் சந்த்ரமா ம்ருகலாஞ்சந:, கேஸரீ நிஷ்டுரக்ஷிப்தம்ருகபூகோ ம்ருகாதிப:* என்றுள்ள ச்லோகத்தையே இவர்கள் நிச்சலும் சிந்தைசெய்யத்தகும்.

### — ஸ்ரீபாஷ்யம் பட்டபாடு இது: —

கீதாபாஷ்யம் பட்டபாடும் சிறிது கேளீர்.

### — முன்னம் கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்ய ஸூக்தி ஸமந்வயஸரணி காட்டுகிறோம் —

13. ஆத்மாநுபவம் (கைவல்யம்) மோக்ஷமன்றென்றும் புநராவ்ருத்தியுண்டென்றும் ஆகவே இது அநித்யபுருஷார்த்தமென்றும் ஒரு கொள்கை. இது அபுநராவ்ருத்தி லக்ஷண மோக்ஷமேயென்றும் நித்யபுருஷார்த்தமே யென்றும் ஒரு கொள்கை. கீதாபாஷ்யத்தில் ஒரு விதமாகவும் ஸ்ரீபாஷ்யத்தில் மற்றொருவிதமாகவும் இருப்பதாக ஒரு தோற்றம். கீதாபாஷ்யத்தில்—பஞ்சாக்நி வித்யாநிஷ்டனான கேவலனுக்கு ப்ரஹ்மாத்மக ப்ரக்ருதி வியுக்த ஆத்ம ஸ்வரூபோபாஸநத்தையும் ப்ரக்ருதி வியுக்த ஆத்மஸ்வரூபாவாப்திரூப பலத்தையும் அர்ச்சிராதிகதியினால் பரமபதப்ராப்தியையும் அபுநராவ்ருத்தியையும் அருளிச் செய்திருப்பதாம். ஸ்ரீ பாஷ்யத்தில் "அப்ரதீகாலம்பநாந் நயதீதி பாதராயண:" என்ற ஸூத்ர விவரணத்தில் "பஞ்சாக்நி விதோபி அர்ச்சிராதிநா கதஸ்ய ப்ரஹ்மப்ராப்த்யபுநராவ்ருத்தி ச்ரவணாச்ச; அத ஏவ தத்க்ரதுந்யாயாத் ப்ரக்ருதி விநிர்முக்த ப்ரஹ்மாத்மகாத்மா நுஸந்தானம் ஸித்தம்" என்றருளிச் செய்திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்மப்ராப்திரூபபலன் ஸ்ரீபாஷ்ய ஸம்மதமாகத்தேறுகிறது. ஆகவே கீதா பாஷ்ய ஸ்ரீபாஷ்ய ஸூக்திகள் பாஸ்பரவிருத்தம் போல் தோற்றும். இந்த விரோதத்தை சமிப்பித்தாக வேண்டும். இதற்காக தேசிகன் மது வித்யா ந்யாயத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தரபலமாகவும் ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதாநபலனாகவும் வைத்து நிர்வஹித்தார். இப்படி நிர்வஹிக்கும் போது கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி அஸ்வரஸமாகிறது. அதுவும் தவிர அவாந்தர பலனைக் கல்பிக்கக்கூடிய ப்ரமாணமும் துர்லபமாகிறது. மதுவித்யா ந்யாயத்திற்கு இங்கு ப்ரஸக்தியில்லை, ஸஹஸ்ர நாமபாஷ்யத்திலே "முக்தாநாம் பரமா கதி:" என்ற விடத்திலே "பரமேதி விசேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித் அர்வாசீநா கதிர் கம்யதே" என்று பட்டர் அருளிச் செய்ததும் வேதார்த்த ஸங்க்ரஹ தாத்பர்யதீபிகையில் "பரமஸ்ஸ்வராடிதி முக்தாத்மோச்யதே; அத்ர பரம சப்தேந கைவல்யமோக்ஷ வ்யாவ்ருத்தி:" என்று ச்ருத ப்ரகாசிகா பட்டர் அருளிச் செய்ததும் பழுதாகும்.

14. கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்ய ஸூக்திகளுக்கு பரஸ்பரம் ஒருவிரோதமும் வாராதபடி நிர்வஹிக்கக்கூடிய வழியுண்டு; ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதான பலன்; ப்ரஹ்மப்ராப்தியைச் சொல்லுகின்ற ஸ்ரீபாஷ்ய ஸூக்தி விரோதிக்கிறதேயென்னில் "ப்ரஹ்மப்ராப்த்யபுநராவ்ருத்தி ச்ரவணுத் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுஸந்தானம் ஸித்தம்" என்று அருளிச் செய்திருக்கையாலே தத்க்ரதுந்யாயத்தாலே ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மப்ராப்திதான் ப்ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸநத்திற்கு அநுரூபமான பலனுகத்தகும். ஆகவே விசேஷண தயா பரப்ரஹ்மத்துக்கு ப்ராப்யத்வம் தேறுகிறபடியால் ப்ரஹ்மப்ராப்தி சொன்னது பொருந்தும். ப்ரஹ்மாநுபவம் அப்ரதானமாகவும் ஆத்மாநுபவமே ப்ரதானமாகவும் ஸித்திக்கிறபடியாலே கைவல்ய மோக்ஷத்திற்கு இழிவு சொல்லப்படுகிறது. ஆக இங்ஙனே நிர்வஹிப்பதில் கீதாபாஷ்யஸூக்திக்கு அஸ்வாரஸ்ய ப்ரஸக்தியே யில்லை.

— கீதாபாஷ்ய ஸூக்தியில் அநவஸரமான அஸ்வாரஸ்யாரோபணம் —

15. இப்படி நிர்வஹித்து எல்லா ஸ்ரீஸூக்திகளையும் நன்ருகப் பொருந்த வைக்கலாமாயிருக்க. ப்ரக்ருதிவியுக்தாத்மாநுபவத்தை அவாந்தரபலனுகவும் ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதானபலனுகவும் கல்பிப்பது நிர்மூலம். பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு மூர்த்தந்ய நாடியினுல் நிஷ்க்ரமணமும் இடையில் வ்யவதானமில்லாமல் பலனடைவதும் ச்ருதப்ரகாசிகையில் அருளிச்செய்யப்பட்டிருக்கிறதே. ஜாபகோபாக்கியானத்தில் வ்யவதாநேந பலப்ராப்தியானதை இங்கே நிதர்சனமாகக் காட்டக்கூடாது. ஜாபகனுக்கு நேர்ந்த ப்ரஹ்மகாய நிஷேவண ரூபமான வ்யவதாநம் ஜிஹ்வைவழியாக நிஷ்க்ரமணத்தினுலானது. தேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜனத்தில் "ஏக க்ரந்த சகலாஸ்வாரஸ்யம் பஹுக்ரந்த ஸ்வாரஸ்யாய க்ராஹ்யம்" என்றிட்டு கீதா பாஷ்யஸூக்திகள் அஸ்வரஸ மென்று ஸஹித்துக்கொள்ள வேண்டியதாக முடித்திருக்கிருர். அஸ்வரஸமென்பதும் அநுபபன்னமென்பதும் பர்யாயமே.

— சமதமசப்தார்த்தவிவரணே தேசிகர் பகற்கோட்டை விட்டவிநோதம் —

16. சமதமசபதார்த்த விவரணத்தில் தாத்யர்ய சந்த்ரிகையில் கீதாபாஷ்யத்தை ஸுஸ்பஷ்டமாகக் கண்டித் திருப்பது த்வீபாந்தரேஷ்வபி ஞஸித்தமாயற்றது. (இது ஸ்ரீராமாநுஜன் 228ல் மணவாளமாமுனிகள் வைபவ உப ஸம்ஹாரத்தில் நன்கு விவரிக்கப்பட்டுள்ள தென்பதை நினைவூட்டுகிருேம்) இத்தகைய விபர்யாஸங்கள் வெள்ளங்கோத்து இருகரையுமழியப் பெருகா நிற்கின்றது.

— ஸுதீவிலோசநஸத்கார ப்ரஸ்தாவோபக்ரமம் —

17. தேசிக ஸூக்திகளில் பஹுவான அஸாமஞ்ஜஸ்யத்தை இவர்களே பிரஸாரஞ்செய்யப் புகுந்தவர்களென்பதில் யார்க்கும் ஸம்சயமோ விவாதமோ இருக்கவுஸக்தியில்லை. இவர்களுக்குச் சில விடங்கள் அஸமஞ்ஜஸமாகத் தோற்றி அதை வெளியிட்டாப்போலே அங்ஙனே நமக்குத் தோன்றுமிடங்களை நாம் வெளியிட்டால் என்ன இழுக்கு? 'தேசிக ஸூக்தியை அஸமஞ்ஜஸமென்று நாங்கள் சொல்லலாமே தவிர நீங்கள் சொல்லலாகாது' என்கிறீரா? ஸுதீவிலோசனகார

ரான வைதிகஸார்வ் பௌமரை உங்களைச் சேர்ந்தவராகச் சொல்லி வருகிறீர்கள்; அவர் ஸச்சரித்ராக்ஷா ஸூக்தியொன்றைப் பற்றி "இது மந்த விஜல்பிதம், அஜ்ஞான விஜ்ரும்பிதம்" என்றெழுதி வைத்திருப்பதைக் கண்டுவருகிறீர்கள்; போக்யமாகவும் கொண்டு வருகிறீர்கள். இதில் ஒரு விசேஷமுங் கேளீர்.

— ஸுதீவிலோசநவிஷயே புராதநகதாப்ரபஞ்சனம் —

18. இந்த ஸச்சரித்ரரக்ஷா விஷய விசேஷ விசாரம் இன்று நேற்றல்ல; 30 வருஷங்களுக்கு முன்பு தொடங்கியது. எனது ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களுள் ஒன்ருன ரக்ஷாவிலோசநபாவப்ராகாசிகையை எடுத்துப்பார்த்தால் விஷயம் விளங்கும்; அது ஸ்ரீமுக வருஷத்தில் அச்சிடப்பட்டது; அதற்கு முன்னமே பாதுகாஸஹஸ்ராவதாரதத்வ மென்கிற எனது ஸம்ஸக்ருத க்ரந்தத்தில் இது ஆரம்பமாகியிருக்கிறது. இதில் பிரதிவாதம் செய்யத் தொடங்கினவர் (வேதாந்த தீபிகா பத்திரிகையில்) வைகுண்டவாஸியான புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி என்கிற மடாஸ்தான வித்வான். அக்காலத்தில் இந்த D. T. அவர்கள் நம்மிடத்தில் அன்போ அத்வேஷமோ கொண்டிருந்தவராதலால் அப்போது அந்த புத்தங்கோட்டப் பெரியா ரெழுதிய விஷயத்தைக் கண்டித்து இவர் தாமே தமது கையினுலேயே ஸ்ரீமுகவு மாசி மாதத்து உத்யாந ஸஞ்சிகையில் எழுதி வெளியிட்டுள்ளார், அது வியாகரண சாஸ்த்ரீய விஷயமாதலால் அப்போது திருவையாறு ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் வ்யாகரணுத்யாபகராயிருந்த (வைகுண்டவாஸி) V. R. ஸ்ரீநிவாஸ தாதாசாரியர் என்பவரைக் கொண்டு எழுதுவித்து அவர் பெயராலேயே வெளியிட்டு அந்த வியாஸத்தின் கீழ் (D. T.) தம்பெயராலும் ஒன்று வெளியிட்டுள்ளார்– "நமது மித்திரர் எழுதிய இந்த வியாஸத்தை எல்லா வித்வான்களும் கவனிக்க வேணுமென்று பிரார்த்திக்கிருேம்; இதனுல் உலகுக்கு உண்மை விளங்குமென்று நம்புகிருேம்; இவ்விஷயத்தில் நாமும் சில ஆதாரங்கள் காட்டுகிருேம்" என்று. இதை அப்போதே நாம் நமது ரக்ஷாவிலோசந பாவ ப்ரகாசிகையில் மிக விரிவாக எழுதியிருக்கிருேம். புத்தங்கோட்டப் பெரியாரின் துர்வாதங்களை நிர்தாக்ஷிண்யமாகக் கண்டித்து உத்யாந பத்ரிகையில் வெளியிட்டதற்கு நம்து பரமஸந்தோஷத்தையும் (அதில் பக்கம் 22ல்) விளக்கியிருக்கிருேம். அவ்விடத்துப் பங்க்திகளிவை– "...........உத்யாநபத்ரிகாஸம்பாதக மஹாபாகா:........யதாயதமுபபாத்ய ஸம்ச்லாகநீய ஸமர்த்தநஸரணிகாஸ் ஸமபூவந்நிதி ஹார்த்தமாநந்த மாவிஷ்குர்ம:" என்று. நாம் இங்ஙனே யெழுதும்படியாக நம்முடைய வழியைப் பின்பற்றியுகந்திருந்தவர் இந்த D. T. தாதாசாரியர் என்பது உலகமறிந்தது; அறியாதவர்களிப்போதறிக.

— ரஹஸ்யத்ரயஸார ப்ரவசனம் விவேகிகள் செய்யவேண்டியவிதம் —

19. ஏதாவதா கிமுக்தம் பவதி? ஏததுக்தம் பவதி. ஸுதீவிலோசநகாரர் தேசிகனை யுத்தேசித்துச் செய்திருக்கிற தூஷணத்தை நாம் யுக்தமென்று கொள்ளுவோமல்லோம். ஆச்சான் பிள்ளையின் திருவுள்ளத்தை உள்ளபடி யுணராமே நிரவத்யமான அவருடைய ஸூக்தியைக் குறித்து ரஹஸ்யத்ரய ஸாரத்தில் மந்தவ்யோக்த மென்று தூஷணமிட்டது போல, ஸுதீவிலோசநகாரரும் ஸச்சரித்ரரக்ஷாஸூக்தியின் ஹ்ருதயத்தையுணராமல் ததுக்தியை மந்த வ்யோக்தமென்று

4

தூஷித்தார். ஆச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தியும் நிரவத்யம். ரக்ஷாஸூக்தியும் நிரவத்யம். மந்தவ்யாமோஹமென்கிற இருவருடைய தூஷணமும் அஸ்தாநே— என்பது தான் முடிந்து நின்றது. ஆகவே *இதி மந்தைரிதம் ப்ரோக்தம்—க்ரந்த ஜ்ஞரபஹாஸ்யம் தத்* இத்யாதி வ்யர்த்த தூஷணங்களை விலக்கியே விவேகி கள் ரஹஸ்யத்ரயஸார ப்ரவசநம் செய்யக் கடவர்கள். D. T. T. க்கு அந்த ப்ரஸக்தியேயில்லை. ப்ரவசனமேது ? ப்ரலபனந்தானே.

— தேசிகஸூக்தி தோஷோத்பாவகர்களின் பௌர்வாபர்ய விசாரம் —

20. நாம் யுக்தமாக எழுதும் விஷயங்கள் தவறென்று தோன்றினால் ப்ராமா ணிகர்கள் ப்ரமாண யுக்திகளைக் காட்டி ஸமஞ்ஜஸமான ஸமாதானங்களை வெளி யிட்டுத் தாங்கள் க்ருதக்ருத்யர்களாக வேண்டுமே யல்லது, அதற்கு வழியில்லா மல் உபாலம்பங்களைப் பொழிவதனால் தங்களுடைய அஸாமர்த்யம் தவிர வேறொன்றும் தேருது. தேசிகோக்திகளில் தோஷோத்பாவன கைங்கர்யத்தை நமக்கு முன்னே இந்த D. T. T. யன்றோ தொடங்கியிருக்கிறார். "இது அஸத்யமே யொழிய ஸத்யமன்று" என்று இவர் கூற நினைத்தால் "தேசிக ஸூக்தி தூஷ ணத்தை நான் இவர்க்குப் பிறகு தொடங்கினேனே யல்லது இவர்க்கு முன்னே தொடங்கினது கிடையாது" என்று கூறி வெற்றி பெறப்பார்க்கலாமத்தனை. "தேசி கோக்திகளில் குற்றங்குறைகள் கூறுவதற்குப் பரிபூர்ணமான அவகாசமுண்டு" என்பதுதான் D. T. T. மஹானுடைய லேகனங்களால் தேறி நின்றது. இது ஆரோபமென்னில், இவ்வொரு விஷயத்தில் மட்டும் நிலை நின்று சர்ச்சை நடத்துவது நன்று. அதற்கு வழியேது? சகமெல்லாம் சாயம் கக்கிக் கிடக் கிறதே. தத்வடீகையில் பஹு அஸாமஞ்ஜஸ்யமுள்ளதாக இந்த D. T. தாதா சாரியார் எழுதியிருப்பதைத் தவறென்று நாம் சொல்லமாட்டோம் நினைக்கவும் மாட்டோம். அதை இவரெழுதியிருக்கக் கூடாதென்றும், தாம் காட்டின வழி யையே பிறர் கைப்பற்றியிருக்க அதற்கு உகக்கவேண்டுமே யல்லது அவர்களை தூஷித்துத் தன்னுடைய சாயத்தைக் கக்க வைத்துக் கொள்வது கூடாதென்றும், கண்ணாடியறையினுள் உட்கார்ந்திருப்பவன் வழிப் போக்கர்கள் மீது கற்களை விட்டெறிந்து அனர்த்தப்படுவதுபோல ஆபத்தை ஸ்வயம் விளைவித்துக்கொள்ள வேண்டாமென்றும் தெரிவிக்கிறோமத்தனை. அமுதனார் செய்த ச்ராத்தத்தில் ஸ்ரீராமாநுஜர் ஆழ்வானை புஜிக்கப் போகவிட்டு......இத்யாதிகளை இவரெழுதிருப் பதிலும் பிசகில்லை. "நிர்ப்பந்தாதேவ" என்றெழுதியதொன்றுதான் வர்ஜநீயம்: அதற்கு முன் ஸன்னிதிகளில் புண்ட்ர லாஞ்சந பரிஷ்காரங்கள் விசேஷமாக இல்லாமலிருந்திருக்கும்; அக்குறையை ஸ்வாமி நீக்கியிருப்பர். அவ்வளவே யொழிய நிர்ப்பந்தப்படுத்துவதற்கு என்ன விஷயமுள்ளது? ஸ்வாமி யுகந்த வழியையே உகந்து வாழ்வோம்' என்று கொண்டு உகந்துவாழ இவருக்கும் இவ ரைச் சேர்ந்தவர்களுக்கும் சிறிதும் பாக்யமில்லாமைக்கு சோகிக்கவேண்டியதே.

— D. T. T. யும் அர்த்தமில்லாதபடியெழுதுகிறாரந்தோ ! —

21. தேசிகனை ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் அப்படி கொண்டாடி யிருக் கிறார், சோளஸிம்ஹபுரம் தொட்டயாசாரியர் ஸ்வாமி இப்படி கொண்டாடி யிருக்

கிரூர்...என்று ஒருவர் மாறி ஒருவராக எழுதியும் பேசியும் போருவதனுல் என்ன ஸாதித்தீர்களாகிறீர்கள் என்பது தெரியவில்லை. ப்ரதிவாதி பயங்கர வம்சஸ்தர்களும் தொட்டயாசார்ய வம்சஸ்தர்களும் இல்லாமல் போகவில்லையே. அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் விலக்ஷண சிஷ்ய ஸம்பத்தோடே விளங்கிவரும் பரம்பரையினரான விவர்கள் அன்று மின்றும் தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்களே யல்லது ஒரு காலத்திலும் ஒரு தேசத்திலும் இதர ஸம்பிரதாயத்தில் காட்டமுடியாது. இவ்வுபய பரம்பரையிலும் வேதாந்தாசார்ய நாமகரணம் விவாதம் முற்றின இக் காலத்திலும் இடையருது தொடர்ந்து வாரா நின்றது. நம்முடைய எத்தனை நூல்களில் இவ்விஷயம் புனருக்தி தோஷத்திற்கு அஞ்சாமல் நிரூபிக்கப்பட்டிருக்கின்றதென்பதை உலகமும் மறவாது, நீங்களும் மறவீர்கள். கி. பி. பத்தொன்பதாவது நூற்றுண்டு பிறந்த பிறகுதான் நீங்கள் தேசிகனை யறிந்தவர்களே யொழிய, அதற்கு முன்பு தேசிகனென்ருே எம்பெருமானுரென்ருே ஆழ்வாரென்ருே ப்ரஸ்தாவித்த ஒரு வடகலை வ்யக்தி கூட இல்லை இல்லையென்று சபதம் பண்ணி யெழுதியிருக்கிறேனே; எழுதின மசி இன்னும் உலரவில்லையே. நீங்கள் அகாண்டே த்வேஷிக்கும் மணவாள மாமுனிகளும் தேசிகோக்திகளைத் தம்முடைய வியாக்கியானங்களிலே உதாஹரித்தருளி யிருப்பதையும், மாமுனிகளுக்குப் பிறகும் ஸந்நிஹிதர்களும் வ்யவஹிதர்களுமான ப்ரக்க்யாத வித்வான்கள் பலர் தென்கலை ஸம்பிரதாயஸ்தர்கள் உதாஹரித்திருப்பதையும் நாமன்ருே பலகால் எடுத்துக் காட்டியிருக்கிருேம். இப்படி உங்கள் வகுப்பில் ஆழ்வாரையோ எம்பெருமானுரையோ தேசிகனையோ ப்ரஸ்தாவித்த ஒரு புராதந வ்யக்தியைக்காட்டி விட்டீர்களானுல்,......பூர்வமேவோக்தம்.

— நீரும் நுமரும் தேசிகனைப் பற்றிக்கொண்ட காலம் உமக்குத் தெரியுமா? —

22. பலவூர்களில் தேசிகனுக்கு பாஹ்யஸ்தலங்களில் புதுக்கோயில் கட்டியிருக்கிறீர்களல்லவா? அப்படி கட்டினதில் முதன் முதலாகக் கட்டினது எவ்வூரில்? என்றைக்கு? என்பதை விசாரித்து நிர்ணயிப்பதில் அருமையில்லையே. அந்த நன்னுளுக்குப் பத்தெட்டு ஆண்டுகட்கு உட்பட்ட காலத்தில்தான் நீங்கள் தேசிகனைப்பிடிக்க ஆரம்பித்தீர்களென்பது சிலாலிகிதம். அப்படி ஆரம்பித்த நாள் தொடங்கி யுத்தகாண்டமே தவிர வேறில்லையென்பதும் நிர்விவாதம். சகுந்தலை, தன்னை துஷ்யந்தன் அங்கீகரிக்க மாட்டேனென்றபோது அவள் கண்வாச்ரமத்திற்கே மீண்டும் செல்ல நினைக்கையில் வெளிவந்திருக்கும் வார்த்தை எவ்வளவு ஆச்சரியமானது தெரியுமோ D. T. ஸ்வாமிந்! [பதிக்ருஹே தவ தாஸ்யமபி க்ஷமம்.] இது எவ்வளவு சாஸ்த்ரார்த்தம் பொதிந்த வார்த்தை! அம்மா! மஹாப்ரபு உன்னை அந்தப்புரத்திற்கு வேண்டாமென்ருரே யொழிய நீ வாசல் பெருக்கவுங் கூடாதென்று மறுத்திலரே யென்ருன் மஹாவிவேகி. அந்த அழகான வார்த்தையை மீண்டுங் கேளீர்—பதிக்ருஹே தவ தாஸ்யமபி க்ஷமம். நம்பெருமாள் ஸன்னிதி முதலான விடங்களில் தேசிகன் இப்படியன்ருே வாழவேண்டும். அவர் திருவுள்ளத்திற்குப் பாங்கல்லாதபடி தெருவுக்கொரு கோவிலைக் கட்டிவைத்துக் கூத்தடிப்பது ஒன்றே உங்கள் புதுமையை ஜயபேரியடித்துக் காட்டவில்லையா?

— D. T. T. அவர்களைநோக்கி உறுதியாகவுரைக்கிறேன் —

23. வாயெடுத்தால் தேசிகன் தேசிகன் — தேசிகதர்சனம்—தேசிக ஸம்ப்ர தாயம் என்கிறீரேயொழிய, அந்த தேசிகன் நிர்ணயித்த அர்த்தங்கள் இன்னின் னவை யென்று நிராபாதமாக எடுத்துக்காட்ட வல்லீரோ? ''விசிஷ்டாத்வைத தர்சனம்'' என்றும் ''தென்னுசார்ய ஸம்ப்ரதாயம்'' என்றும் நான் வெளியிட்டிருக் கிற நூல்கள் பலவாண்டுகளாக உலகம் பரவியுள்ளன. இவை ஒரு பாஷையி லல்ல; வடமொழி தென்மொழி வடுகுகளான மூன்று பாஷைகளிலென்பதை உலகமறியும், இவற்றை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார் கள்! வெளியிட்டும் வருகிருர்கள். இப்படி "தேசிக தர்சனம்" என்று பெயரிட்டு ஒரு சுவடி எழுதி உதவுவீரா? அப்படியெழுத உம்மிடம் என்ன சரக்கிருக்கிறது? "யதி ஸ்யாத் உபலப்யேத'' என்பது உமக்குத் தெரியாததா? நீங்கள் கொண்டிருக்கிற ஒவ்வோர் அர்த்தமும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திவிருத்தம், பகவத் பாஷ்யகார ஸூக்தி விருத்தம், கிம் பஹுநா? ஸ்ரீதேசிக ஸூக்தி விருத்தம் என்று நாம் விபுலமாகச் செய்துள்ள—செய்து வருகின்ற-ப்ராப்த ஸமயேஷு செய்யப் போகின்ற நிருப ணங்கள் நீடூழி நிற்பவையன்ருே? உங்களில் வித்வான்களுக்குக் குறைவா? பிரசுரம் செய்யப் பத்ரிகைகளுக்குக் குறைவா? எதிலும் எக்குறையுமில்லையே. வேதத்தில் ''துர்ப்பிக்ஷம் தேவலோகேஷு'' [தைத்திரீயாரண்யகே.] என்ருப் போலே உங்கள் திறத்திலே ''துர்ப்பிக்ஷம் ஸாத்விகார்த்தேஷு'' என்ன வேண்டி யன்ருே நின்றது. இப்படி நாம் துணிந்தெழுதுகிருேமென்று ஸந்தாபயதி ஸ்வம் தேஹ மாபாததலமஸ்தகமாக தபிக்கலாம் பரிதபிக்கலாம். சிலபாவிசர்களையிட்டு உபாலம்ப வர்ஷங்கள் செய்யலாம்; நீரேஸ்பஷ்டமாக எழுதியிருக்கிறபடி ஆசை தீர வயிற்றெடுச்சல் தீர ப்ரஹரிக்கலாம். வேருென்றுமாகாது.

— D. T.க்கு ஸ்வஸம்ப்ரதாயமே தெரியாதென்பது —

24. இதுவும் நாம் சபதம் செய்து சொல்லுகிறவார்த்தை. இவர்க்கு வடகலை ஸம்ப்ரதாய மின்னதென்றே தெரியாதென்பதை இவருடைய பூதிகந்திச் சுவடியைக் கொண்டு மூதலிக்கிறேன். அதில் (பக்கம் 102ல்) எழுதுகிருர்.

> ''பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்த பல விஷயங்களை தேசிகன் அங்கீகரிக்காமல் வேறுவிதமாக யோஜித்தும் கண்டித்துமிருக்கிருர். ப்ரபத்திக்கு உபாயத்வ முண்டா இல்லையா? பிராட்டிக்கு புருஷகாரத்வம் தவிர உபாய கோஷ்டியில் ப்ரவேசமுண்டா இல்லையா? இத்யாதிவிஷயங்கள் மிகமிக ப்ரதானமானவை. இவற்றில் பெரியவாச்சான்பிள்ளை அவலம்பித்தபக்ஷத்தை தேசிகன் மறுக்கிருர்.''

இவை D. T. T. யின் பங்க்திகள். இதில் "ப்ரபத்திக்கு உபாயத்வமுண்டா இல்லையா?'' என்றது போலே ''பிராட்டிக்கு உபாயத்வமுண்டா இல்லையா?'' என்று விகல்பசரீர விந்யாஸம் பண்ணியிருக்கவேண்டுமிவர். எம்பெருமானுக்குப் போலே பிராட்டிக்கும் உபாயத்வமுண்டென்பது இவரைச் சேர்ந்தவர்களின்மதம். அப்படியே இவர்கள் க்ரந்தமெழுதியிருக்கிருர்கள்; எப்போது தொடங்கி? கோபால

தேசிகன் காலந்தொடங்கி. அதையெல்லாம் நாம் சரமாரியாகக் கண்டித் தொழித்தபடியாலே "பிராட்டிக்கு உபாயத்வமுண்டா இல்லையா?" என்று விகல்பசரீரத்தை வைத்துக்காட்டவும் வெட்கப்பட்டு "உபாயகோஷ்டியில் ப்ரவேச முண்டா இல்லையா?" என்று ப்ரஸங்கிக்கிருர். உபாயகோஷ்டியில் ப்ரவேச மில்லையென்று பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததாகவும், அதை தேசிகன் மறுத்து பிராட்டிக்கு உபாயகோஷ்டியில் 'ப்ரவேசமுண்டென்று ஸ்தாபித்து விட்டதாகவும் எழுதியுள்ளார். ஸம்ப்ரதாயத்தில் இது முக்கியமான விஷயமென்கிருர். உபாய கோஷ்டியில் ப்ரவேசமென்ருல் என்ன அர்த்தமையா! என்றுகேட்டால் வாய் திறக்க வல்லவரோ இவர்?

## — பிராட்டிக்கு உபாய கோஷ்டியில் அந்வயம் தாராளமாக வுண்டு —

25. பட்டர், பெரியவாச்சான்பிள்ளை முதலான ஸகலபூர்வாசாரியர்களுக்கும் அபிமதமானதே இது. எது? பிராட்டிக்கு உபாயகோஷ்டியில் அந்வயம் தாராள மாகவுண்டென்பது. உபாயமென்பதற்கு ஸித்தோபாயபூதனை ஸர்வேச்வர னென்று தானேபொருள் அவனுடைய கோஷ்டியில் யாருக்கு ப்ரவேசமில்லை? எல்லோருக்கும் பரிபூர்ணமான ப்ரவேசமுண்டு. இது பிராட்டிக்கு ஏன் ஐயா இல்லாமற்போகும். மேளதாளங்களுடன் உண்டு; பட்டர் "லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா" என்ருர். அதன்படி பெருமாளுக்கு ஒரு மோஷ்டியுண்டு. அந்த கோஷ்டியிலே பிராட்டி அந்வயிக்கமாட்டாளென்று ஒருபேதையனும் பேசான்.

## பிராட்டிக்கு மோக்ஷப்ரதத்வமில்லையென்பதில் பெரியவாச்சான்பிள்ளைக்கும் தேசிகனுக்கும் துல்யமான திருவுள்ளமே.

26 வடகலையாருடைய பிடிவாதத்தையநுஸரித்து இவரெழுதியிருக்க வேண்டியது எப்படியென்ருல் "பிராட்டிக்கு மோக்ஷப்ரதத்வமுண்டா இல்லையா?" என்று விகல்பித்து, இல்லையென்று பெரியவாச்சான்பிள்ளையின் ஸித்தாந்தமாகவும் உண்டென்று தேசிகஸித்தாந்தமாகவும் எழுதியிருக்கவேண்டும் உண்மையில் வடகலையார் கூறுவது இதுதானே. ப்ரபத்தியுபாயத்வவாதமும், லக்ஷ்மியுபாயத்வ வாதமும் ஸம்பிரதாயத்தில் முக்கியமானவை யென்று மற்றையோருமெழுதியிருப் பது உண்மையே. எந்த ஸம்ப்ரதாயத்திலென்ருல் வடகலை ஸமபிரதாயத்திலென்ன ணுமேயொழிய தேசிக ஸம்பிரதாயத்திலென்று வாய்திறக்கவும் போகாது. ஏன்? இவ்விரண்டையும் வலிதாகக் கண்டித் தொழித்தவர் தேசிகனேயொழிய வேருெருவரல்லர், பிராட்டியின் உபாயத்வத்தை தேசிகன் கண்டித்தவிதம் முந்துற முன்னம் மூதலிக்கப்படுகிறது.

## — பிராட்டியின் உபாயத்வத்தை தேசிகன் கண்டித்தவிதம் —

27. ஆளவந்தார் அருளிச்செய்த சதுச்ச்லோகியில் மூன்ருவது சுலோகத்தில் *ச்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத் ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு நருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்பது

5

உத்தரார்த்தம்; மோக்ஷபர்யந்தமான எல்லாப் பேறுகளும் பிராட்டியின் அநுக்ரஹத்தாலல்லது ஸம்பவிக்கமாட்டாதென்பது இதன்பொருள். இவ் விடத்தில் ஒரு சங்கை யுண்டாகும். (அதாவது) அபார காருண்ய வாத்ஸல்யாதி ஸகல ஸத்குண நிதியான எம்பெருமான் இடர்களைக் களைந்து இன்பங்களை யளிக்கவல்லவனு யிருக்க அவனுடைய அனுக்ரஹத்தினுலாகாதது ஒன்றுண்டோ? பிராட்டியின் அனுக்ரஹம் எதற்காக? என்று; இங்கு இந்த சங்கையைத் தோன்று வித்த தேசிகன் அந்த ச்லோகத்தின் பாஷ்யத்திலும் வேறிடங்களிலும் பரிஹார முணர்த்தியுள்ளார். "நநு மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" எனறு தொடங்கி சங்கையை உத்க்ஷேபித்து 'மைவம்' என்று தொடங்கி தத்பரிஹாரம் பண்ணியுள்ளார். ப்ரக்ருத ச்லோகபாஷ்யத்தின் முடிவில் நிஷ்கர்ஷம் செய்தருளின ஸ்ரீஸூக்தியாவது "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்பது முதல்வாக்கியம். இதன் பொருளாவது, மோக்ஷமளிப்பவன் எம்பெருமானே; பிராட்டியோவென்னில், புருஷகாரபூதையாயிருக்கிருளென்பது யாவருமிசைந்தது—என்பதாம்.

### — தேசிகன் பிராட்டிக்கு இரண்டுக்ருத்யங்கள் காட்டுதல் —

28. (அந்த சதுச்ச்லோகியில்தானே) இரண்டாவது சுலோகத்தில் மோக்ஷ ப்ரதாநப்ரஸ்தாவமே யில்லாதிருக்கவும் ப்ராஸங்கிகமாகக் கொண்ட விசாரத்தில் தேசிகர் தாமே காரிகையொன்று இட்டருளினர்; (அதாவது) *அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே.* என்பதாம். இதன்பொருளாவது, கர்மாநுரூபமாகப் பேறு பெறுவிக்குமவன் எம்பெருமானே; பிராட்டி தான் இரண்டு க்ருத்யங்களை வைத்துக்கொள்ளுகிருள்; அவன் நிக்ரஹிக்கும்போது அதைத் தடுப்பதும். அநுக்ரஹிக் கும்போது அதை மேன்மேலும் வளரச்செய்வது மென்கை.

### — தேசிகன் ச்ருதப்ரகாசிகாபட்டருடைய ஸ்ரீஸூக்திகாட்டுதல் —

29. அதற்குமேல் "அத்ர வரதகுருபதேசாநுஸாரிபி: வ்யாஸார்யைச்ச உக்தம் "ப்ரதாபோஷ்மல பித்ருத்வதுராஸதபகவத்ஸமாச்ரயணஸித்தயே புருஷ காரநுப்ரவிஷ்ட வாத்ஸல்யநிர்ப்பரலக்ஷ்மீஸமாச்ரயணம் ஸ்ரீமச்சப்தவிவரண முகேந அபிதீயதே இதி" என்ருர் நிகமாந்தகுருதாமே இந்த வாக்யத்தில் வ்யா ஸார்யரென்னப்பட்டவர் ச்ருதப்ரகாசிகாபட்டர்; அவர்க்கு வரதகுருபதேசாநு ஸாரித்வவிசேஷணமிட்டதனுல் ஸத்ஸம்ப்ரதாயசுத்தி காட்டப்பட்டதாயிற்று. தேசிகன் தமக்கு ப்ராசார்யரான நடாதூரம்மாள் உபதேசித்த யதார்த்தமான அர்த்தத்தையே அவருடைய திருவடியான ச்ருதப்காசிகாபட்டர் பொறித்து வைத்தாரென்று தெரிவித்தபடி. ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்துவைத்ததென்ன வென்ருல்; எம்பெருமான் வாத்ஸல்யாதி குணநிதியாயிருக்கச் செய்தேயும் சீற்றங் கொள்ளும்படியான பிதாவாயுமிருக்கையாலே அணுகவொண்ணுதபடியாகவுமிருக்க நேருமாகையாலே அணுகுவிப்பதற்குப் பாங்கான தண்ணளிவாய்ந்த பிராட்டியைப் புருஷகாரமாகவரிப்பது ஸ்ரீமச்சப்தவிவரணமுகத்தாலே சொல்லப்படுகிறது என்பதாம். *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம்

ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத்* என்கிற பிரமாணத்தை மீறி ஒரு ஆசார்யரும் அருளிச் செய்யாரன்றே. நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தேதீரும்; அப்போது நிர்ப்பயமாக அணுகுவதற்குப் பிராட்டியின் புரஸ்கரணம் இன்றியமையாதது; ஆனதுபற்றியே *ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசந மந: காந்தாப்ரஸாதாத் ருதே* இத்யாதியை ஆளவந்தார் அருளிச்செய்தது பொருத்தம் என்னுமிதுவே தேசிகருடைய நிஷ்கர்ஷம். பிராட்டி மோக்ஷமளிக்கிறுளென்றே அளிக்கவல்லவளென்றே தேசிகர் ஓரிடத்திலும் பணித்ததில்லை. பணித்திருந்தால் ஒருவரி எடுத்துக்காட்டலாமே.

— தேசிகன் எங்களாழ்வானுடைய ஸ்ரீஸூக்திகாட்டுதல் —

30. மேலேகுறித்த ச்ருதப்ரகாசிகாபட்டருடைய ஸ்ரீஸூக்திக்கும் முன்னே "உக்தஞ்ச ஸ்ரீவிஷ்ணுசித்தை: கத்யவ்யாக்க்யாநாரம்பே; மாத்ருத்வைகரூபாம் ச்ரியம் ப்ரபத்யதே; மாதா ஹிதா பி புத்ரஸ்ய ப்ரியமேவ பச்யதி; பிதா து உபயம் பச்யதி. அதோ தண்டதரத்வ ஹீநதைவ அவலம்பநம் அஸ்யாம் தசாயாம் ஆஸீத் இதி." என்று எங்களாழ்வான் ஸ்ரீஸூக்தியையு மெடுத்துக்காட்டினர் நிகமாந்தகுருவரர். வாத்ஸல்யாதிகளைப்போல தண்டதரத்வமுமுடைய எம்பெருமானை யணுகுவதற்கு *நித்யமஜ்ஞாத நிக்ரஹையான பிராட்டியைப் புரஸ்கரிக்க வேண்டியது அவசியமாகிறது—என்பதையே ஒவ்வோராசார்யரும் அருளிச்செய்து வைத்தார். எங்களாழ்வானுடைய ஸூக்திக்குமுன்னே பட்டருடைய ஸ்ரீகுண ரத்நகோச ஸ்ரீஸூக்தியையும் உதாஹரித்தார்– 'ஆஹுச்ச *பிதேவ த்வத்ப்ரேயாந் இத்யாரப்ய 'மாதா ததஸி ந:* இதி." என்று இவ்வளவோடும் ஓய்ந்திலர்; உடனே "ஏவம் அநப்யுபகமே தாம் புரஸ்க்ருத்ய பகவதபிகமநமபி தத்ரதத் ரோக்தம் துஸ்ஸ்தம் ஸ்யாத்" என்றுமருளிச்செய்தார்; இதன் பொருள் எளிதாகத் தெரியுமே; தண்டதரனை எம்பெருமானுடைய சீற்றத்தையாற்றுதற்குப் பிராட்டியைப் புருஷகாரமாகக் கொள்ளவேணுமென்று இசையாதொழியில் ஆங்காங்கு சாஸ்த்ரங்களில் பிராட்டியைப் புரஸ்கரித்து எம்பெருமானை ஆச்ரயிக்க வேணுமென்று கூறியிருப்பது பொருந்தாமற்போகும் என்கை. இஃதொன்றுபோதும் தேசிகனுடைய திருவுள்ளத்தையுணர. இதே கெட்டத்தில்தான் (கிழே உதாஹரித்த) *அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே* என்னும் ஸ்வகீய காரிகையை இட்டருளினர். இந்தகாரிகையானது ப்ரக்ருத விஷயத்தில் தோன்றும் ஸகலஸந்தேஹங்களையும் வேரறுக்கவல்லதன்றே. பிராட்டியின் இத்தகைய இரண்டு க்ருத்யங்களைத் திருவுள்ளம்பற்றியே ஆளவந்தார் *ச்ரேயோ நஹ்யரவிந்த லோசந.... இத்யாதியை யருளிச் செய்தாரென்று தேசிகனுடைய பாஷ்ய நிகமனம். இதைத் திடமாகத் தெரிந்து கொள்ளும். *கதிராயிரமிரவியின் முன்னிலையிலுமா இருள்?

— தேசிகனுடைய அத்யத்புததிவ்யஸூக்திகாணீர் —

31. தேசிகன் "நநு மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" என்று தாம் உத்க்ஷேபித்த ஆசங்கையைப் பரிஹரிக்குமிடத்து 'மோக்ஷப்ரதே' பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றருளிச் செய்ததுண்டே' இஃதொன்றுபோதாதா தெளிவதற்கு? இதற்கு அடுத்த வாக்ய

மும் கேளீர்... "பரிபூர்ணநுபவ ப்ரதாந ஸங்கல்பஸ் து பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத்நீகஸ்ய வா இதி யதாப்ரமாணம் பவது" என்றுர். ப்ரமாணஸாகர பாரங்கத ரான தேசிகர் ப்ரமாண பரிசீலநபூர்வகமாகவும் ஆசார்யோபதேசாநு ஸாரமாகவும் ஸித்தாந்தப் பொருளைத் தாம் விவரியாதே "யதாப்ரமாணம் பவது" என்றது ஏன்? என்கிற விசாரம் நாம் செய்யத்தக்கதன்று. உள்ள வாக்யத்தை விமர்சிப்போம்; பலனளிப்பவன் பலப்ரதான ஸங்கல்பம் செய்யவேண்டியவன்; எவன் பலனளிப் பவனே அவன் ஸங்கல்பகர்த்தாவாவன். ப்ரக்ருதமான மோக்ஷப்ரதானத்தில் ஸங்கல்பக்ருத்யாதிகாரியை விமர்சிக்கிற தேசிகன் "ஸங்கல்ப: பகவத: ஸ்வஸ்யைவவா? பத்ந்யா அபி வா? என்று விகல்ப சரீரத்தை வைத்திலர் என்பது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது நியாயஸித்தாஞ்ஜனத்தில் 'இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே* என்கிற ஸ்வாமி யின் காரிகையானது ப்ராபத்தியின் உபாயத்வத்தைமட்டும் தவிர்ப்பதன்று; பிராட்டி யின் உபாயத்வத்தைத்தான் முந்துற முன்னம் தவிர்ப்பது, பிராட்டிக்கும் உபாயத்வ முண்டென்று திருவுள்ளத்திலோடியிருந்தால் * இயம் லக்ஷ்மீததீசாநோபாயத்வ ப்ரத்யயாத்மிகா* என்றன்றோ வசனவ்யக்தி வெளிவந்திருக்கும். இச்சிறு விஷயத்தையும் க்ரஹிக்கமாட்டிற்றிலீரா D. T. T. ஸ்வாமிந்!.

— தேசிகனுடைய சில்லரைரஹஸ்யங்களின் ஸ்ரீஸூக்திகாணீர் —

32. ஸம்ஸ்க்ருத நூல்களில் இங்ஙனே விமர்சித்து விளக்கியருளின தேசி கன் சில்லரை ரஹஸ்யங்களில் பணித்தவையும் பாரீர்;—ரஹஸ்ய ரத்நாவளி யென்றும் அதன் ஹ்ருதயமென்றும் இரண்டு ரஹஸ்யங்கள் ப்ரஸித்தம். முப்பது வாக்யங்கள் கொண்ட ரஹஸ்ய ரத்நாவளியில் நான்காவது வாக்யம்—"ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிச யத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள். இவளைப் புருஷகாரமாக்கவேண்டுகிறது ஈச்வரன் தண்டதரனுகையாலே" என்று பிள்ளை லோகாசார்யருடைய முமுக்ஷுப்படி முதலான ரஹஸ்யச்சாயையிலே பணித்து வைத்தார். இதன் விவரணமான ரஹஸ்ய ரத்நாவலீ ஹ்ருதயத்தில் விசேஷ முள்ளது; (அஃதென்ன வென்னில்) இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்" என்ற தற்கு–"பவேயம் சரணம் ஹி வ:*! என்றருளிச்செய்தபடியே இவர்களுக்கு ரக்ஷா ஹேதுவாகிருளென்றபடி" என்று விவரணம் காட்டினர். ரக்ஷகத்வமும் ரக்ஷாஹேது த்வமும் பர்யாயமன்று; ஈச்வரனை ரக்ஷாஹேதுவென்று யாரும் சொல்லவில்லையே.

— இனி, D. T. T. கொண்டாடும் ரஹஸ்யத்ரயஸாரத்தின் அற்புதமான பெருமை —

33. ஆகவிப்படி பிராட்டி திறத்தில் உபபாதனங்கள் செய்தருளின ஸ்வாமி தாமே ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தின் முடிவில்— "இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணி கார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:......மந்தபுத்தீநாம் துராத் மநாம் குதர்க்க வ்யாலதஷ்டாநாம் விப்ராந்தேந்த்ரிய வாஜிநாம்* என்கிற தசை யாம்" என்கிற பரம பாவந பரமபோக்ய–திவ்ய ஸ்ரீஸூக்திமாலிகையை இட்டருளி யுள்ளார். இந்தவாக்யராசியைப்பற்றி நாற்பது வருஷகாலமாக ப்ரபல சர்ச்சை

செய்து வருகிறோம். மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகமாய்த் தோற்றினதாகத் தாம் அபிமானிக்கும் அர்த்தங்கள் எவை? *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க இத்யாதி ஸத்கார யோக்யர்களாகத் தாம் கொண்ட க்ருஹீதக்ராஹிகள் பெரியோர்களைப் பணிந்து கேளாமல் மூர்க்கத்தனமாகச் சொல்லிவரும் அர்த்தங்கள் எவை? என்றிவ் வளவே நமது கேள்வி. வர்ஷசதமானாலும் இதற்கு விடை வெளிவ்ராது.

— ஜரத்கவாதி வாக்யார்த்தம் எப்படியிருக்குமென்று தெரியுமா? —

— இப்படித்தானிருக்கும் —

34. அந்த ப்ரகரணத்தில் அவர் தாம் முன்னே அத்யத்புதமாக நிருபித்த அபூர்வ அர்த்தங்கள் எவை யென்று பார்த்து விடையிறுக்கவேண்டிய விஷயமிது *த்ருட பூர்வச்ருதாதி ஸத்காரத்திற்கு முன்னேயுள்ள நிருபணங்களிவை—"அல மேஷா பரித்ராதுமென்று ஸ்ரீவால்மீகி பகவான் சரணாகதிஸாரமான ஆதிகாவ்யத் திலே நிபந்தித்தான். *ஸம்ஸாரார்ணவதாரிணீ மென்று ஹிரண்யகர்ப்பகாச்யபாதி களும் சொன்னார்கள். *வாச: பரம் ப்ரார்த்தயிதா ப்ரபத்யேத் நியத: ச்ரியம்* என்று ஸ்ரீசௌநகபகவான் விதித்தான். *ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்திபலதாயினீ* என்று .......ஸ்ரீ பராசரப்ரஹ்மர்ஷி யருளிச்செய்தான். ச்ரிய:பதிதானும் 'யாமாலம் ப்ய ஸுகேநேமம் துஸ்தரம் ஹி குணோததிம், நிஸ்தரந்த்யசிரேணைவ வ்யக்த த்யாநபராயணா:* என்று ஸ்ரீஸாத்வதஸம்ஹிதையிலே ஸ்ரீபதிருபத்யாநத்திலே யருளிச்செய்தான். ஆளவந்தாரும் *ஜகத் ஸமஸ்தம் யதபாங்கஸம்ச்ரயம்* என்றும் *ச்ரேயோ நஹ்யரவிந்த......ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்று மருளிச் செய்தார். ஸ்ரீபாஷ்யகாரரும் ஸ்ரீ வைகுண்டகத்யத்திலே சேஷசேஷாசநாதி....... ஆஜ்ஞாபயந்த்யா' என்று பகவத் கைங்கர்யரூப பரமபுருஷார்த்தம் இவள் நியோக த்தின்படியே நடத்தவேணுமென்றருளிச்செய்தார். கூரத்தாழ்வானும் *ஸ்வஸ்தி ஸ்ரீர் திசதாத் .......* என்று ஸங்க்ரஹித்த அர்த்தத்தை 'தேவி! த்வநமஹிமாவதி: ....என்று தொடங்கி விஸ்தரித்தார். பட்டரும் *ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம்வா என்று ச்ருதியிலுள்ள உதார சப்தத்துக்கு வியாக்கியானம் பண்ணினார். ஸ்ரீ ஸூக்தபாஷ்யத்திலே பெரிய ஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உப பாதித்தார். இப்படி ச்ருதிஸ்ம்ருதி ஸம்ப்ரதாயம் நிற்கிற நிலைகளைக்கொண்டு ஸ்ரீமச்சப்தத்திற் சொன்ன விசேஷணத்வத்துக்கு விக்ரஹாதிகளுக்குப்போலே வஸ்த்வநுரூபமான உபயோக விசேஷங்களை ஸஹ்ருதயர் அறிந்து கொள்வது" என்றித்தகைய வாக்யராசிகள் போகின்றன; அந்தோ! இவை என்ன வாக்யார்த் தங்கள்! ஜரத்கவாதி வாக்யார்த்தமன்றோ இவை. சதுச்ச்லோகீபாஷ்யம் ரஹஸ்ய ரத்நாவளி முதலான ஸ்வகீய க்ரந்தங்களில் தாமே உபபாதித்த அர்த்தங்களுக்கு இங்கே கண்டனமா? மண்டனமா? முண்டனமா? என்பதொன்றே கேள்வி; கண்டனமுண்டனமேயொழிய மண்டனமன்றென்பதுகல்வெட்டு.

— அதிஸாஹஸம், அத்யந்தஸாஹஸம் —

35 D. T. T. பெரியீர்! நீர் எழுதினதெல்லாம் ஸாஹஸமாயிருக்கச் செய்தே யும். வந்த்யாஸுதசசச்ருங்க ஸஹோதரமான நிகமபரிமலத்தைக் கற்பித்ததோடு நில்லாமல், தேசிகனுகந்த ஆசாரியர்களருளிச் செய்த அர்த்தங்களையெல்லாம்

அதில் கண்டித்துவிட்டாரென்றெழுதினதுண்டே இது அதிஸாஹஸம், அத்யந்த ஸாஹஸம், அதிதராம்ஸாஹஸம். நிகமபரிமலம்போனலும், "தேசிகனைப்போல் எண்ணிறந்த நூல்களையருளிச் செய்தவர்கள் இல்லை' என்று நீங்கள் வாய்வெருவு கிற எண்ணிறந்த நூல்கள் இல்லாமற்போகவில்லையே; அவற்றில் பெரியவாச் சான்பிள்ளைபக்கல் தேசிகன் அபசாரப்பட்டதாக ஓரெழுத்து காட்டுவீரா? அரை யெழுத்துகாட்டுவீரா? என்றேனுமொருநாள் என்காலமாகுமே; அதன் பிறகும் காட்டமுடியாதுகாணும். ஆருயிரப்படியைக் கண்ணெடுத்துப் பார்த்தவரல்லர் தேசிகரென்று சபதம்பண்ணுவேன். "இன்ன அர்த்தத்தை ஆருயிரப்படியிலிருந்து காட்டினர் தேசிகரென்று ஒருதுணுக்கையாவது எடுத்துக் காட்டிவிடுமே.

— பெரியவாச்சான்பிள்ளை பக்கலில் தேசிகனுடைய பக்தி ப்ரகர்ஷம் —

36. தேசிகரை சைவர்கள் "கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தைக் கொண்டு "இதற்கு அர்த்தம் சொல்லு மையா' என்று மடிபிடித்துக் கொண்டார்கள். அப்போது தேசிகர் செய்ததென்ன தெரியுமோ? ஏன் தெரியாது? பலகால் எடுத்துக் காட்டியிருக்கிறேனே. பெரிய வாச்சான்பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படியில் தாம் ஸேவித்த அர்த்தத்தை யெடுத்துரைத்து "இதி ஆசார்யா:" என்றூர். எதில்? ஸச்சரித்ரரக்ஷையில், "இத் யாஹு." என்றே, "இதி வ்யாக்க்யாதம்" என்றே எழுதியிருக்கலாம். பெரியவாச் சான்பிள்ளை திருவடிகளை நேரில் பணிந்து பொருள்கேட்க பாக்யஹீநராளுலும் அவரருளிய ஸ்ரீஸூக்திகளை ஸேவித்து ஞானம் பெற்றதற்கு க்ருதக்னராவரா? "இதெல்லாம் எனக்கு ஸம்ப்ரதாய ப்ரதீபமெழுதுகிற காலத்தில் தெரியாமல் போயிற்று" என்பதற்கில்லையே. நாற்பது வருஷகாலமாக என்னுடைய நூல்களை இடைவிடாமல் ஸேவித்து வருகிறீரே. இன்றுதானு அபூர்வமாக எழுதுகிறேன்?

— தூப்பலைப்பற்றி ஸாரதமமான வார்த்தை —

37. அப்பயதீக்ஷிதர் தேசிகனுக்கு ஸமகாலத்தவரென்றும், அப்போதே தும்பைவனமேற்பட்டு தூப்பலென்கிற கொச்சைநாமமும் வழங்கிவந்ததென்றும் சொல்லியுமெழுதியும் தீர்ந்தாலொழிய உய்யும்வகையில்லையென்று திடமாகக் கொள்வீர். தூப்புல் விஷயத்தில் ஸாரமாகத் தெரிவிக்கிறேன். இதுவொரு பெரிய விஷயமன்று. தூப்புலென்று புராதனமாகவேயுண்டென்று கொண்டாலும் ஆழ் வார் திருவாக்கிலவதரித்த திருத்தண்காவை விட்டிட்டு தூப்பலையொருகாலும் ஆசாரியர்கள் ஆதரியார்கள். நவீனர்கள் நவீனச்செயல்கள் பலவற்றில் இதனை ஆதரித்துக்கொண்டதுமொன்று–என்பதுதான் உண்மை. திருநாங்கூர் பிராந் தத்திலுள்ள திருத்தேவனூர் தொகையை கீழச்சாலை யென்றும், பாண்டி நாட்டி லுள்ள வரகுணமங்கையை நத்தமென்றும் வழங்கி வருகிருர்கள். ஆனல் அந்தச் சொற்கள் நூல்களில் ஏருது. *சீரொன்று தூப்புல்* என்னுந் தனியனைப் பிள்ளை லோகாசார்யர் இயற்றினரென்று D T. ஸ்வாமிந்! நீரும அடிக்கடி யெழுதி பங்கப் பட்டு வருகிறீர் அந்தோ! தத்வமுக்தாகலாப வியாக்கியானமான ஸர்வார்த்தஸித்தி யில் 'மரீசிகாம்பஸி ஸ்நாத: கபுஷ்பக்ருதசேகர:, ஏஷ வந்த்யாஸுதோ யாதி சசச்ருங்க தநுர்த்தர:." என்றூர் அற்புதமான சுலோகம் உதாஹரித்தருளுகிருர் தேசிகன். அது தான் நினைவுக்கு வருகின்றது தேசிகப் பிரபந்தங்களென்று நீங்கள் வைத்துக் கொண்டிருப்பவற்றில் ஒன்றிலாவது தூப்புலென்னுஞ்சொல்

ஏறியிருக்கிறதாவென்று பார்க்கலாகாதா? அத்திகிரிமாகாத்மியத்தை மெய்விரத நன்னிலத்து மேன்மையேத்தி வேதாந்தவாசிரியன் விளங்கினனே" என்று ஸ்வாமிதாம் தலைக்கட்டியான பின்பு "சீராருந்தூப்புல் திருவேங்கடமுடையான்" என்றொரு வெண்பாவைப் புனைந்திருக்கிறீர்கள். கீழ்ச் செய்யுளில் இல்லாத விஷயம் இதில் ஏதேனுமுண்டோவென்று பார்த்துத் தெளிய முடியவில்லையா உமக்கும்? பிரபந்தசாரத்தைப் பற்றிப் பின்னையும் கிளற வேண்டுமோ? அப்பய தீக்ஷிதாக்ரஹாரத் தூப்பலே தென் திருவரங்கம் கோயில் கொண்ட பிள்ளைலோகா சாரியரும் தெரிந்துகொண்டு தனியனிட்டருளினரென்பது வெகு அற்புதம்.

## இதுதான் சுவைமிக்கது.

38. கேளீர்! நன்னூலில் "தன்னாசிரியன் தன்னொடு கற்றோன், தன் மாணாக்கன் தகுமுரைகாரனென்று, இன்னோர் பாயிரமியம்புதல் கடனே" என்னுஞ் சூத்திரத்தினால் தனியனிடுகிற அதிகாரம் ஆசார்யனுக்கே முதன்மையாக மொழியப்பட்டிருத்தலால் பிள்ளைலோகாசாரியர் தேசிகனுக்கு ஆசாரியராயிருந்தால் அந்த ஆசார்யத்வ நிபந்தனமாக்த் தனியனிட்டாரென்று தாராளமாக இசையலாம். அதில் ஒரு குறையுமில்லை. இருவர்க்கும் ஸமாகமப்ரஸக்தியே யில்லையென்பதைப் பலகால் பரக்க நிரூபித்திருக்கிறோமாகையாலே அவ்வாசிரியர்மீது ஆரோபிக்க நினைப்பதே அஸமஞ்ஜஸம். தூப்புலென்னுஞ் சொல்லை ஸ்வாமி தேசிகன எப்படியறிய பரஸக்தியில்லையோ அப்படி பிள்ளைலோகாசார்யரும் அறிய ப்ரஸக்தியில்லை யென்பதை, D. T. ஸ்வாமிந்! ஸத்யம் சபே; இதனை உமது உள்ளம் உள்ளபடியறிந்திருக்கின்றது ஆனால் 30, 40 ஆண்டுகட்கு முன்பு அறிந்திருக்கவில்லை தான்; அப்ரத்ருஷ்யமான நிரூபணங்களினாலும் தெளிவு விளையவில்லையென்றால் *தேனொடு வண்டாலும் பாசுரத்தின் ஈற்றடியேயாக வேணும்.

— தூப்பலென்பதைப் பற்றிய நிகமனம். —

39. *அப்ரியஸ்ய ச பத்த்யஸ்ய வக்தா ச்ரோதா ச துர்லப:* என்றதில் வக்த்ருதுர்ப்பிக்ஷமில்லாமே விஜ்ஞாபிக்கிறேன் கேளீர். இப்போது விளக்கொளி யெம்பெருமான் ஸன்னிதியில் ஸ்வாமி தேசிகனெழுந்தருளி யிருக்குமிடந்தான் அவருடைய திருமாளிகையாயிருந்ததென்பர்; திருத்தண்கா என்கிற திருநாமம் திவ்யப்ரபந்தங்களில் ஏறியுள்ளது அவ்வளவேயுமன்றிக்கே சரணாகதிதீபிகையில் நம் தேசிகன் திருவாக்கினாலும் மொழிபெயர்க்கப்பட்டு ஏறியுள்ளது. இத்தகைய திவ்யமான வ்யபதேசத்தைக் கொள்ளாதே விட்டிட்டு நியாயாலய வ்யவஹாரங்களிற்கூட ஏறியிராத ஒரு தூப்பலைப் பிடித்துக் கொண்டு மெல்லுவது உமது நெஞ்சுக்கு இசைந்திருக்கிறதா? பிறரை வஞ்சிக்கலாம்; நெஞ்சைக் கூடவா வஞ்சிக்க முடியும்? நெஞ்சை வஞ்சிப்பவர்கள் நஞ்சினுங் கொடியரல்லரோ? "அண்ணாவப்பங்கார் பழநடை விளக்கத்தில் ரங்கநாதன் தூப்பில் பிள்ளையை முனிந்தோமென்று நிக்ரஹித்ததாகஎழுதியிருக்கையாலே தூப்புலென்பது ஸ்ரீ ரங்கநாதன் திருவாக்கிலேயே வந்ததாக ஒப்புக்கொண்டு தீரவேண்டும்" என்கிறார் ஒருவர். வாஸ்தவம்; இத்தகைய ப்ர்பல ப்ரமாணத்தினால் வெற்றி பெற்று விடலாம் இதனால் ஸ்ரீரங்கநாதன் முனிந்ததாகச் சொல்லப் படுவதொன்றே உண்மையெனத் தேறிநிற்கும். இந்த அவலக்ஷணப்ரஸங்கம் போதுமே.

— தேசிகன் ஸ்தாபித்தருளின ப்ரபத்த்யநுபாயத்வம் —

40. ப்ரபத்தியின் உபாயத்வமும் பிராட்டியின் உபாய கோஷ்டீப்ரவேசமும் முக்கியமான விஷயமென்று D. T. T. எழுதியிருந்ததை அநுவதித்து, பிராட்டியின் உபாயகோஷ்டீ ப்ரவேச வைபவத்தை விவரித்தோம் கீழ் ப்ரபத்தியின் உபாயத்வத்தைக் கண்டித்து எழுதியவர் நம்முடைய ஆசார்யவர்கத்தில் தேசிகனைப்போல் வேறு எவருமில்லை. தேசிக க்ரந்தங்களில் தொட்ட தொட்ட விடமெல்லாம் ப்ரபத்த்யுபாயத்வ கண்டனந்தான். கீழே எடுத்துக் காட்டிய *இயம் கேவல லக்ஷ்மீசேத்யாதி ச்லோகம் அல்பம் ஸ்வல்பம் என்னும்படி அநல்பமான ச்லோகங்களும் வாக்யங்களும் அபரிமிதம். ரஹஸ்யத்ரய ஸாரத்திலேயே "உபாயஸ் ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ் ஸ பகவாந்" என்று ஆரம்பித்து "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாணநிபுண:" என்று தலைக்கட்டினதுண்டே இது தலையான ப்ரமாணம். எல்லாவற்றிற்கும் சிகரமாக ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரத்தில் சரம ச்லோகாதி காரத்தில் (மாமேகம் சரணம் வ்ரஜ) என்றவிடத்து ஏகபதார்த்த விவரணம் செய்தருளுகிற தேசிகன் ப்ரஸாதித்திருப்பவைகளை ஸேவித்தால் கல்லும் கரையுமே: பங்க்திகளைக் கேளும்;-"*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய்; அவன் ஸஹகரியாத போது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அண்ணாந்திருக்கிற இவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று—என்று ஏக சப்தத்தாலே சொல்லிற்றாயிற்று," (மறுபடியும் பத்துவரி கடந்து மேலும் ஸாதிக்கிறார்)—'*என்னுணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவுமவனதின்னருளே யென்றும் *இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்தும் அம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏக சப்தத்துக்கு தாத்பர்யம் என்கிறார் தேசிகன்.

— சிலாலிகிதமாய்த் திடமான விஷயம். —

41. ரகுவம்சமும் ராமோதந்தமுமே போதுபோக்காயிருப்பார்க்கு இந்த ஸ்ரீஸூக்திகளின் சுவையை யறிய விரகில்லையே. ஸ்ரீதேசிக ஸித்தாந்தம் இன்னதென்றறியப்பெறாத ஜாட்யதிமிரம் கதிராயிரமிரவி கலந்தெரித்தாலும் கழியமாட்டாதே. ப்ரபத்த்யநுபாயத்வவிளக்கம் இப்போது இவ்வளவோடு போதும். ஸம்ப்ரதாயத்தில் மிக முக்கியமான விஷயங்களென்று இவர் (D. T. T.) தெரிவித்த இரண்டுவிஷயங்களிலும் இவரும் இவரைச் சேர்ந்தவர்களும் தேசிகஸூக்திகளுக்கு அத்யந்த வைதேசிகர்களென்பதும், தேசிகன் பெரும்பாலும் எழுதியதெல்லாம் பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளைச் சிரமேற்கொண்டும் அவருடைய திவ்யஸூக்திகளைத் தஞ்சமாகக் கொண்டுமே யென்பதும் சிலாலிகிதமாயிற்று.

## — இன்னமொரு நூற்றாண்டிரும் —

அல்பஜ்ஞர்களும் அசடுகளுமான சிலரை வஞ்சிப்பதற்காகவே பூதி கந்திச்சுவடி தோன்றியதென்று நாம் நிரூபித்துக்காட்ட விஷயங்கள் ஒன்றிரண்டல்ல, பலபல வுள்ளன ஒவ்வொன்றையுமெடுத்துக்காட்டிக் கொண்டு நாம் வீண்போது போக்குவதை உலகம் ஸஹியாது, இதுகாறும் நாம் நிரூபித்த விஷயங்களுக்கு விடை வெளிவரட்டுமென்று சொல்லி நாம் விச்ராந்தி பெறுவதுதான் உரியது. ஆனாலும், ஒவ்வொரு அசட்டு வாதமும் கண்ணில் படும்போது 'இதை யலசிக்காட்டாமல் விட்டு விடலாகாது, என்றே தோன்றுகிறது.

ராமாநுஜ தயாபாத்ரத்தனியனும் அதைச் சேர்ந்த வாழிதிருநாமம் முதலியனவுமெல்லாம் காப்பியடித்தவை யென்று மறுவாய்திறக்க முடியாதபடி நாம் நிரூபித்திருந்தோம்; அதற்கு மறுப்புரைக்கிறாரிவர்—எவர்? D. T. T. எதில்? பூதிகந்தியில்.

"இது முன்சொன்னதும் நாம் பரிஹரித்ததுந்தான். உதாஹரணமாக ஒன்றே கூறுகின்றோம் பொய் சொல்வதற்கு அஞ்சாமல் தைவபயமில்லாமல் பிறர் மனம் புண்படுவதே தனக்குப் புருஷார்த்தமென்று கொண்ட இந்தப் பைத்யம் ராமாநுஜ தயாபாத்ராதிகள் போட்டியாகச் செய்யப்பட்டவை யென்று உலகத்தார்க்குப்ப்ரமத்தை யுண்டாக்க முயன்று வருகின்றது. அது வீணென்று ஸம்ப்ரதாயப்ரதீபத்தில் விளக்கியிருக்கின்றோம். ஒரே ஒரு விஷயம் மட்டும் இங்கே கூறுகின்றோம். தேசிகன் நூறு திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். அவருடைய அந்த்ய காலத்தில் இன்னுமொரு நூற்றாண்டிரும் என்று பாடியது பொருந்துகின்றது; மாமுனிகள் 73 திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார்; இவருக்கும் இன்னுமொரு நூற்றாண்டிரும் என்று பாடுகின்றார்கள். இவ்விரண்டுக்குள் எது முந்தியதாயிருக்கு மென்பதை அல்ப புத்திகளுமறியலாம்."—என்று.

இதைக்காணும் அல்பபுத்திகள் "ஆமாம், ஆமாம். இது மெய்தானே" என்று தலை துலுக்கிவிடுவார்கள். "வேதாந்த தேசிகனே இன்னமொரு நூற்றாண்டிரும்" என்கிற வாழ்த்து தேசிகன் நூறு ஸம்வத்ஸரம் ஜீவித்திருந்த பிறகு தோன்றியதென்று இவருடைய மருள். அப்படித் தோன்றியதாயிருந்தால் இந்த ஆபாதனம் அவிசால்யமாகவே நிற்கும். இந்த D T.T. தங்கள் நூல்களையும் பார்த்தவரல்லர், பிறர் நூல்களையும் பார்த்தவரல்லர்; எதைக்கேட்டாலும் ஆகாசத்தைப்பார்க்க வல்லவர் என்பதொன்றே உறுதி. இவர் வகுப்பினர் புதுத்தெய்வங் கொண்டாடத் தொடங்கினபோது கற்பித்தவை யென்று நாம் ஸ்தாபித்திருக்கும் எழு நூல்களுள் ஒன்றான பிரபந்தாநுஸந்தான தீபிகையில் எழுதி வைத்திருப்பது தெரியுமா? "தேசிகனுடைய எழுபத்தொன்பதாவது பிராயத்தில் ஸர்வதாரி வருஷத்தில் தேசிகனேயின்னு மொரு நூற்றாண்டிருமென்பதான வாழியை அரங்கநாதனுடைய ஆணையினால் பிரசாரம் செய்தார்கள்" என்றெழுதப்பட்டுள்ளது தேசிகன் திருநாடலங்கரிப்பதற்கு இருபத்தொரு வருடங்களுக்கு முன்னமே அவர்க்கு இன்னமொரு நூற்றாண்டிரும் அவதரித்து விட்டதாக எழுதி வைத்திருக்கிற அந்த அபத்தச்சுவடியையும் கொண்டாடிக் கூத்தடித்திருக்கிறாரிவர்.

7

கேட்கிறேனிப்போதும்மை. பிரபந்தாநுஸந்தான தீபிகையில் இப்படி யெழுதப்பட்டிருக்கிறதென்பதை நீர் பார்த்திருக்கிறீரா இல்லையா? என்னுடைய ஸகல நூல்களும் உமக்கு நித்யாநுஸந்தானமாக இருக்கின்றனவல்லவா? 1929ல் நானெழுதி வெளியிட்டிருக்கும் பாதுகாஸஹ ஸ்ராவதாரதத்வம் என்கிற ஸம்ஸ்க்ருத நூலின் அநுபந்தத்தில் இவ்விஷயத்தைவிளக்கமாக எடுத்தெழுதியிருக்கிறேனே அதையும் பார்த்திருக்கவில்லையா நீர்? "அண்ணங்கராசாரியருடைய வாதங்களை நாங்கள் நூறு தடவை கண்டித்திருந்தும் அவர் எழுதினதையே திருப்பித்திருப்பி யெழுதிக் கொண்டிருக்கிறார்" என்று எள்ளளவும் கூசாமல் ஸம்ப்ரதாயப்ரதீபத்தில் எழுதியிருக்கிறீரா இல்லையா? இப்பெரிய விஷயத்தை எத்தனை தடவை கண்டித்திருக்கிறீர் சொல்லுமையா! இதற்கு நீர் இந்த ஜன்மத்தில் வாயைக் கையைத்திறக்க முடியுமாவென்று கேட்கிறேன். "பிரபந்தாநுஸந்தான தீபிகை கல்பிதந்தான், அப்ராமாணிகந்தான்" என்று தலைவிதியாக ஒப்புக்கொள்ளுகிறீரா? அல்லது "அது ப்ராமாணிகந்தான், தேசிகனே இன்னமொரு நூற்றாண்டிருமென்று வாழ்த்தினது அவர் திருநாட்டுக்கெழுந்தருள்வதற்குப் பலபல வருஷங்களுக்கு முன்புதான்" என்று ஒப்புக்கொள்ளுகிறீரா? இதைப்பற்றி நீர் பிராமாணிகர்கள் தெளியும்படி விடையெழுதி விட்டால் எனது ஸம்மத்தை நானே பறைசாற்றிக்கொள்வேன்.

உலகமெல்லாங் கொண்டாடும் உபதேச ரத்தினமாலையில் தவறுகளிருப்பதாகக் காட்டவருகிறார். அது காட்டத் தொடங்கும்போது "மிகுந்தவருத்தத்துடன் சில குற்றங்களைக் கூறுகிறோம்" என்கிறார். உடனே லகுடப்ரஹாரம் கிடைக்கும்—கிடைத்தே தீருமென்று தெரிந்தே மிகுந்தவருத்தத்துடனென்கிறார் பாவம்! குற்றமோ நற்றமோ எதைக்கூறுவதற்கும் இவர் அதிகாரியல்லர் என்பதை உலகமெல்லாமுணரும். ஸ்ரீபீஷ்மரைப்பற்றிக் கூறும்போது "தஸ்மிந் அஸ்தமிதே பீஷ்மே கௌரவாணாம் துரந்தரே. ஜ்ஞாநாந்யல்பீபவிஷ்யந்தி" என்றதின் சுவடு இவர்க்குத் தெரியவிரகில்லை. அல்பீபவிஷ்யந்தி யென்றதன் ஆழ்பொருளை ஈட்டில் (10-2-9) பட்டரருளிச்செய்வதன் கருத்தை யறியவும் இவர் அநர்ஹர். ஸ்ரீபாஷ்யத்தில் குணங்கூறவோ தோஷங் கூறவோ இன்னார்தாம் அதிகாரி என்றில்லையோ? உபதேச. ஐந்தாம்பாட்டில் "மாதங்கள் நாள்கள் தன்னை" என்றிருக்கிறதாம்; நாள்கள் தம்மை என்றிருக்கவேணுமென்பது மாமுனிகளுக்குத் தெரியவில்லையாம். எல்லாப்பதிப்புகளிலும் "நாள்கடமை" என்று தானுள்ளது. தன்னை என்றிருந்தாலும் குற்றமில்லை அஃறிணைச் சொற்களில் உறழ்வாதலால்.

* தெருளுற்றவாழ்வார்களென்கிற முப்பத்தாரும்பாட்டில் ஸமாப்த புநராத்தமென்கிற தோஷமாம்; குமாரவரதார்யக்ருதமாக இவர்கள் கல்பித்திருக்கும் தேசிகமங்களத்தில் "யஸ்மாதேவ மயா ஸர்வம் சாஸ்த்ரமக்ராஹி" என்றதற்குப்பின் நாந்யத: என்றதில்தான் இந்ததோஷம் துஷ்பரிஹாரம்; இங்கு தோஷலேசமுமில்லை. (Late சேட்லூர் நரஸிம்ஹாசாரியர்க்கு "காஞ்சீம் வீக்ஷ்ய ஹநூ நிஜே பளபளாத் காராஞ்சநைஸ் ஸம்ஸ்க்ரியாத்" என்று தந்தஉபதேசத்தை அவர்ஸபலமாக்கினார். தாலுப்ரஹாரம் செய்துகொள்ளும்படி யெழுதுகிற இவரே அதற்கு உரியவரென்று முடிந்ததாயிற்று. பூதிகந்தி புஷ்பப்ராணசனத்தின் முதற்பகுதி முற்றிற்று.

---

ஸ்ரீ:
ஆண்டாள் திருவடிகளே சரணம்
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருப்பாவையபார்த்த திரஸ்காரம்

[ஸ்ரீ P. R. நரஸிம்ஹாசாரியர் சிரோமணி, வித்வான்]

## வெண்பா

திருப்பாவை யாழ்பொருளும் தீபிகையுங் காணு
திருப்பா ரொருவ ரெழுந்து — செருக்காலே
கைபோன போக்கெல்லாம் கைக்கபிக்க வென்றெழுதிக்
கைமேலே கண்டார் கனி.

## அவதாரிகை.

"திருப்பாவைவாஸ்தவார்த்தம்—D. T. தாதாசாரியர்" என்ற வொரு சிறு புத்தகம் இன்று நமது பார்வைக்கு வந்தது. "திருப்பாவைக்கு வியர்க்கியானம் செய்தவர்கள் பலர்; அவர்கள் எல்லோரும் எல்லாவகையிலும் மிகப் பெரியவர்கள்; அவர்களுடைய உரைகள் மிகச் சுவையுள்ளவை" என்று, *யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசா: ப்ரதிபேதிரே* என்னுங்கணக்கில் எழுதிவிட்டு, உடனே இயற்கையான அவிவேகமும் அஸூயையும் தூண்டப்பெற்ற D.T.T. என்பவர்,

> "ஆகிலும் பகவானுடைய திருக்கல்யாண குணங்களின் சிறப்பை எடுத்துணர்த்துவதையே முக்யநோக்காகக் கொண்ட இவ்வாசிரியர்கள் ரஸிகர்கள் ரஸிக்கும்படி சொன்ன விஷயங்கள் திருப்பாவையின் ஸ்வரஸப் பொருளை மறைத்து விட்டன. அது இப்பொழுது ஒருவர்க்குமே தெரியாமல் போய்விட்டது; பகவத்பாகவதாசார்ய ஆண்டாள் கடாக்ஷத்தினுல் நானறிந்தேன் அறிந்தபடி வெளியிடுகிறேன்"

என்றெழுதியுள்ளார். இதனுல் "பூருவர்கள் சொன்னது ரஸிகர்கள் ரஸிக்கக் கூடியது; இப்பொழுது நானெழுதுவது ரஸிகர்கள் வெறுக்கவும் அரஸிகர்கள் உகக்கவுங்கூடியது" என்று தானே ஸ்பஷ்டமாகக் காட்டினுராயிற்று.

"யதி: பூஜ்யோ நஸம்சய:" என்றதற்கு 'யதியாயிருப்பவர் பூஜிக்கத் தகுந்தவரே; இதில் ஸந்தேஹமில்லை' என்று ஒருவர் பொருள் கூறினுர். உடனே மற்றொருவர் எழுந்தார்; ஸ்வாமி தேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்தில் "பிக்ஷேதி சிஷ்யஜநரக்ஷணதக்ஷிணேதி சாடீதி சாச்வத மடோபதிகல்பநேதி, க்ரந்தோபஸங்க்ரஹண மூல்யமிதி ப்ருவாணு: ஸந்ந்யாஸிநோபி தததே மஹதீம் தநாயாம்" என்று யதார்த்தமாக ஸாதித்திருப்பதை யறியாமல் உண்மைக்கு மாருக இப்படி அர்த்தம் சொல்லுவது அஸமஞ்ஜஸம்; யதி: பூஜ்யோ ந=யதியென்று பார்த்து திடீரென்று பூஜித்து விடக்கூடாது; ஸம்சய:= அவருடைய நடத்தை முதலானவற்றில் ஸந்தேஹமுள்ளது. என்றுதான் அர்த்தங் கொள்ளவேண்டும்; இது நான் ஆசார்ய கடாக்ஷவிசேஷத்தினுல்

ஸாக்ஷாத்கரித்த ஸமஞ்ஜஸமான அர்த்தம்" என்ருர். அனைவரும் கரகோஷத்துடன் அபிநந்தித்தார்கள்-என்னுமாபோலேதானுள்ளது இவருடைய கூற்று.

க்ரமேண அக்ஷரந்தோறும் விமர்சிப்போம். அட்டையில் வ்யங்க்யம் என மகுடமிட்டு எழுதப்பட்டுள்ளதற்கும், உள்ளே முகவுரை என மகுடமிட்டு எழுதப்பட்டுள்ளதற்கும் ஒரு விதமான ஸம்பந்தமும் கிடையாது. முரண்பாடுமுண்டு. பல வருடங்களுக்கு முன்பு கும்பகோணத்தில் திருப்பாவைக்குச் சில வியாக்கியானங்களைச் சேர்த்து அச்சிட்டவர்கள் அந்தகஸ்வாமி வியாக்கியான மென்று ஒன்று அச்சிட்டிருக்கிருர்கள். அந்த ஸ்வாமி பிறவிக்குருடராம் எந்த நூலையும் பார்த்தவரல்லவாம். பிறவிக்குருடராகையால் பார்க்கக் கண்ணில்லை. ஏதாவது கேட்டிருப்பரோ என்னவோ. அவர் எந்தகாரணத்தினுலோ திருப்பாவைக்கு உரையிடவேணுமென்று ஆசைகொண்டு மனம் போனபடியும் கை போனபடியும் எழுதிவைத்தார். அந்தகராகையாலே தாமே எழுதப்ரஸக்தியில்லை. தாம் சொல்ல ஒருவரெழுத இப்படியாகத் தோன்றியது அந்த உரை. ஆனுல் அதில் சுவையொன்றும் கிடையாதென்பதேயொழிய 'உன்மத்தரிவர்' என்று நினைக்கும்படியாகவோ, ஆசார்யாபசாரப்படுகிறவர் என்னும் படியாகவோ அஃது இருப்பதாக யாரும் சொல்லக் கேட்டதில்லை. இப்பொழுது ப்ரஸ்தாவித்த திருப்பாவைவாஸ்சவார்த்தம் எழுதியவரை அந்தகரென்று யாரும் சொல்லக் கேட்டதில்லை. விஷயங்களைப் பார்த்தாலோ அப்படிச் சொல்லவேண்டியதாகிறது; எதையும் பாராமல் "அரைகுறைவ்யுத்பத்தி அனர்த்தஹேது" என்ற கணக்கிலே 'இன்னதையெண்ணி இன்னது எழுதுகிருர் என்று ஒருவரும் தெரிந்து கொள்ள முடியாதபடிக்கும், *ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதிப்படியே தாமும் தெரிந்து கொள்ள முடியாதபடிக்கும் ஆச்சரியமாக எழுதிப் போருகிருர்.

"இதையெல்லாம் ராகத்வேஷமின்றிப் பராமர்சிக்கவேணு" மென்கிருர். ஒன்றில் விருப்பமும் ஒன்றில் வெறுப்புமில்லாதபடி நிஷ்பக்ஷபாதமாகப் பராமர்சிக்க வேணுமென்கை. அபூர்வமான வொருவிசேஷத்தை யெழுதியிருந்தால் அதை மத்யஸ்தபுத்தியோடு ஆராய வேண்டுவது யுக்தமேயாகும். "ஸ்ரீராமாயணத்தில் ராவணவதம் சொல்லப்படவில்லை, விபீஷணவதந்தான் சொல்லப்படுகிறதென்பதை யான் பல பல உபபத்திகளுடன் நிரூபித்திருக்கிறேன்; ராகத்வேஷமின்றி இதைப் பராமர்சிக்க வேணும்" என்று ஒருவர் எழுதினுல், அதை மத்யஸ்தபுத்தியோடு பராமர்சிப்பதென்பது பரமஸாத்விகர்க்கும் ப்ராப்தமாகாது. தேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்திலே "திஷ்டது குணவமர்ச:....தோஷாநுசிந்தநார்த்தா ஸ்ம்ருதிரபி தூரீகரோதி வைராக்யம்," என்று ஸாதித்த கணக்கிலே க்ஷாந்தியென்பது * வானுமெறிகடலோ மாருதமோ தீயகமோ கானுமொருங்கிற்றென்று ஆழ்வாரருளிச் செய்கிறரீதியிலே வானமும் கானமும் விரைந்தோடுமே.

முகவுரை தொடங்கும்போதே இதைச் சிலரோ பலரோ வெறுப்பர்களென்பதைத் தாமே காட்டி எழுதியுள்ளார். "இதில் சிலர்க்கு வெறுப்பிருந்தாலும்" என்றெழுதலாம் பலர்க்கும் வெறுப்பாகுமென்பதைத் தாமே தெரிந்துகொண்டு

அஸம்பத்தமாக எழுதிவைப்பது அதிஸாஹஸம். பவபூதிமஹாகவி "யே நாம கேசித் இஹ நः ப்ரதயந்த்யவஜ்ஞாம்" என்றதில் கேசித் என்றுரே யொழிய (பஹவः) என்றுரில்லையே. அது கிடக்க.

எழுதுகிருர் D. T,—"இங்கு ஸ்ரீ க்ருஷ்ணனுக்கும் இடைப்பெண்களுக்கும் நாயிகா நாயகபாவ ப்ரஸக்தியேயில்லை; இப்பெண்கள் க்ருஷ்ணனோடு பத்நீபாவத்தாலே க்ருஷ்ணனோடு ஸம்ச்லேஷம் பெற்றவர்களல்லர்; அதை உத்தேசமாகக் கொண்டவர்களுமல்லர். அது உண்டு என்பதை அறிவிக்கக் கூடிய ஒரு எழுத்துக்கூட திருப்பாவையில் இல்லை." என்று. மேலும் எழுதுகிருர்—

"மூல க்ரந்தங்களில் கோப ஸ்த்ரீகள் விஷயமான க்ருஷ்ணன் நடத்தை ஒரு விதமாகச் சொல்லப் பட்டிருப்பதால் திருப்பாவையிலும் அப்படிச் சொல்ல வேணுமென்பது நியாயமன்று, ஆண்டாளுடைய ஸ்ருஷ்டியான இந்த ப்ரபந்தத்தில் அவளுடைய மனப்போக்குக்குத் தக்கபடி பல மாறுதல்கள் இருக்கின்றன. ஆகையால், திருப்பாவையில் ஆண்டாள் அதையெல்லாம் கருதி யிருக்கிருளா என்பதை நாம் ஆராய வேண்டும்."..... ..... இத்யாதி.

இதில் ஒவ்வோரக்ஷரமும் அசடு வழிய நிற்பதாம். இங்கு மூலக்ரந்தங்களிலென்றது ஸ்ரீ விஷ்ணுபுராண ஸ்ரீ பாகவதாதிகளிலென்றபடிதானே. அவற்றில் கோபஸ்த்ரீகள் விஷயமான க்ருஷ்ணன் நடத்தை ஒருவிதமாகச் சொல்லப் பட்டிருப்பதாயெழுதுகிருர். எந்த விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறதென்று கேட்டால் காமுக வ்யாபாரமென்பர் இவர். இது இவருடைய அந்யதாஜ்ஞான ஸாம்ராஜ்ய மிருந்தபடி. பாரதயுத்தத்திலே அச்வத்தாமா ப்ரயோகித்த அபாண்ட வாஸ்த்ரத்தினுல் அபிமந்யுவின் மனைவியான உத்தரையின் கருப்பிண்டம் கரிக்கட்டையாய் விழுந்தபோது அதைத் தன் திருவடி ஸ்பர்சத்தினுல் உயிர்ப்பிக்கின்ற கண்ணபிரான் "யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ்ச மயிதிஷ்டதி" என்றதைக் கொண்டு தேசிகன் யாதவாப்யுதயத்தில் "விமோஹநே வல்லவகேஹிநீநாம் ந ப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம்" என்கிருர். கூரத்தாழ்வானும் "தூர்த்தாயிதம் தவஹி யத் கில ராஸ கோஷ்ட்யாம் தத்கீர்த்தநம் பரமபாவநமாமநந்தி" என்றருளிச் செய்கிருர்.

பரமபக்தரான ஜயதேவர் தமது கீத கோவிந்தத்திற்கு மங்கள ச்லோக மிடுகிறவர் "மேகைர் மேதுரமம்பரம்" என்று தொடங்கி "ராதாமாதவயோர் ஜயந்தி யமுநாகூலே ரஹः கேலயः" என்கிருர். அந்த ரஹः கேளியை இவர் ஸம்ஸாரிகளின் ஹேயபோகமாக நினைத்திருக்கிருர் போலும். அந்த கீத கோவிந்தத்தினுள்ளும் "தீரஸமீரே யமுநாதீரே வஸதி வநே வநமாலீ, கோபீபீநபயோதரமர்தந நிர்தய கரயுக சாலீ. ச்லிஷ்யதி காமபி சும்பதி காமபி ரமயதி காமபி ராமாம் ... ..." என்று பக்தர்களுக்குப் பரம போக்யமான கீதமிட்டிருக்கிருர். இவற்றின் ரஸவிசேஷங்களை யநுபவிக்கமாட்டாத விவர் "க்ருஷ்ணன் நடத்தை ஒரு விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது" என்கிருர். இந்தமருள் எப்படியாவதிருக்கட்டும். அத்தகைய போகத்தை ஆய்ப்பெண்டுகள் விரும்பியதாகவோ அது திருப்பாவையிலிருப்பதாகவோ யாரேனும் சொல்லுகிருர்களோ? எழுதியிருக்கிருர்களோ? *நீராடப்போதுவீர் போதுமினோ* என்ற விடத்தில் நீராட வென்பதனுல் க்ருஷ்ண

ஸம்ச்லேஷத்தை நினைக்கிறதென்று பூர்வாசாரியர்கள் வியாக்கியானமிட்டருளி யிருப்பதை விபரீதமாக க்ரஹித்து அஸ்தாநே ப்ரமித்து இங்ஙனே யெழுதுகிருரிவர்.

கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில் எம்பெருமானுடைய விபவாவதார ஹேதுவை யருளிச் செய்யப்புகுந்து "ஸம்ச்லேஷே பஜதாம் த்வரா பரவச:" என்கிருர். ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் "ஸம்ச்லிஷ்யஸி த்வமிஹ தேந ஸமாநதர்மா." என்கிருர். அஸ்மதாதி சேதநர்களோடு எம்பெருமான் ஸம்ச்லேஷத்தை விரும்பி வந்தவதரிப்பதாகவும் ஸம்ச்லேஷிப்பதாகவும் அருளிச் செய்தாராயிற்று. அந்த ஸம்ச்லேஷமும் காமுக வியாபாரமென்று இவர் நினைக்கிருர் போலும்.

பட்டர் இட்டருளின திருப்பாவைத் தனியனான *நீலாதுங்க ஸ்தநகிரிதடீ ஸுப்த மித்யாதி ச்லோகத்தை இவரும் எழுதியுள்ளார்; அதில் கோபிகளின் நேரன்பைப்பற்றிப் பேசின ஆண்டாளை வணங்குகின்றேனென்ருரில்லை. "ச்ருதிசத சிரஸ்ஸித்தம் ஸ்வம் பாரார்த்த்யம் அத்யாபயந்தீ" என்ருர். இது எவ்வளவு விலை யுயர்ந்த வார்த்தை யென்பதை இவர் அறியவும் அறிவிக்கவும் அதிகாரியல்லரே. கோபிகளின் நோன்பைச் சொல்லுவது திருப்பாவைக்கு முக்கியமன்று, ச்ருதிசத சிரஸ்ஸித்தமான ஸ்வகீய பாரார்த்த்யத்தை எம்பெருமான் திருமுன்பே விண் ணப்பஞ் செய்வதுதான் விஷயமென்று ஸ்பஷ்டமாகக் காட்டி யிருக்கவில்லையா? அந்த ச்லோகத்தை இவர் எதற்காக எடுத்தெழுதுகிருரென்று கேட்டால் கண்ட னத்திற்காகத்தா னெடுத்துக்கொண்டேனென்பர். மூஷிகாவதார மெடுத்தால் எதையும் கண்டித்துவிடலாகுமே.

திருப்பாவை நிகமனப் பாசுரத்தில் ஆண்டாள் தானே யருளிச்செய்வதைப் பார்ப்போம். 'சேயிழையார் நோன்பு நோற்றவாற்றைக் கோதை சொன்ன" என்றுதானே சொல்லி யிருக்கவேண்டும். மெய்யே நோன்பு நோற்பவர்கள் நந்தகோபர் திருமாளிகைக்குச் செல்லவும், அங்குக் கோயில் காப்பானையும் தோரணவாசல் காப்பானையும் நந்தகோப யசோதா க்ருஷ்ணபலராமர்களையும் நப் பின்னைப் பிராட்டியையும் எழுப்ப என்ன ப்ரஸக்தி? பதின்மூன்ரும் பாட்டில் *பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்* என்றுள்ளது. அந்த பாவைக்களம் எது என்பதை இவர் ஆராய்ந்தாரோ? பாவையென்பது நோன்பு. அது நோற்கு மிடம் பாவைக்களம். ஆய்ச்சிகளெல்லாரும் அங்கே போய்ச்சேர்ந்து பகவத் ஸன்னிதியிலே போய் ப்ரார்த்தனை செய்திருக்கிருர்கள்.

என்ன ப்ரார்த்தனை செய்திருக்கிருர்களென்று பார்க்கவேணும். முதற் பாட்டிலிருந்தே பறையென்கிற வொரு சொல் தொடர்ந்து வருகிறது. பறை தரு வான், அறைபறை நென்னலே வாய் நேர்ந்தான், பறைதாராய்....என்றிப்படியுள்ள வசனவ்யக்திகளை ஆழ்ந்து நோக்கவேணும். பறையென்னுஞ் சொல் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார்களின் திருவாக்குக்களிலும் பலகால் வந்திருக்கிறது. "பாடு வார்களும் பல்பறை கொட்ட நின்ருடுவார்களும்" 'உடைமணி பறை கறங்க" என்கிருர் பெரியாழ்வார். *கன்றப்பறைகறங்க* பாரோர்களெல்லாம் மகிழப் பறை கறங்க* என்கிருர் திருமங்கையாழ்வார். இவ்விடங்களில் பறையென்பதற்கு

வாத்யவிசேஷமே பொருள். திருப்பாவையிலும் "சாலப் பெரும்பறையே" என்ற விடத்தில் வாத்யவிசேஷமும் ஒரு பொருள். அந்த ஓரிடத்தில் மட்டுமே இப் பொருள். மற்றபடி *நமக்கே பறைதருவான்* தொடங்கி *பறை கொண்ட வாற்றை யீருக பறையென்று வருமிடங்களி லெல்லாம் (உத்தேச்யம்) என்பதே பொருள். இங்கு எது உத்தேச்யமென்ருல் *உனக்கே நாமாட் செய்வோ மென்று தெரிவிக்கப்பட்ட கைங்கர்யமேயாகும். அர்த்தபஞ்சகத்தில் " பலம் ப்ராப்தே: " என்னப்பட்ட புருஷார்த்தம் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் கைங் கரியமேயாதலாலும், பிறமதத்தவர்களெல்லாரும் இதற்கு முரணுகச் சொல்லுபவர் களாதலாலும் மிகப்ரதானமான விதில் சங்காகளங்கு மிருக்கக் கூடாதென்று இதை நிஷ்கல்மஷமாக ஸ்தாபிப்பதற்காகவே ஆண்டாள் இத்திருப்பாவையை அருளிச் செய்தாளென்பது முன்னேர் மொழிந்தமுறை.

மஹர்ஷிகள் "சேருர் ஹவிஷ்யம் புஞ்ஜாதா: கோப்ய: காத்யாயநீவ்ரதம்" என்று கோபிகள் ஒரு விரதமனுட்டித்ததாகக் கூறிவைத்தார்கள். அதிலிருந்து ஆய்ச்சிகள் நோன்பு நோற்றமையைத் தெரிந்து கொண்டாளாண்டாள். அதைத் தான் அநுகரித்தரளென்பது மட்டு மன்று; அநுகாரம் முற்றி, தானே ஒரு நோன்பு நோற்பவளாக ஆயினள். கேவலம் ஆய்ச்சிகளின் பேச்சுமட்டுமேயாளுல், "மல்லரை மாட்டிய தேவாதிதேவனை" "வல்லானை கொன்ருனை" இத்யாதிகள் இதில் சேர ப்ரஸக்தியில்லையாமே. திருவாய்ப்பாடியில் நடவாத மல்லவதத்தையும் குவலயாபீட பஞ்ஜனத்தையும் கோபிகள் கூற விரகில்லையே. *நாயகனுய் பாசுரத் தில் ஆண்டாளுக்கே ஏற்ற அர்ச்சாவதாராநுபவமேயென்பது நிஸ்ஸந்தேஹம்.

*வங்கக்கடல் கடைந்த பாசுரத்தில் கோபிகள் மாதவனிடம் சென்று பறை கொண்டதாகவும் அதைத் தான் கூறினதாகவும் வெளியிட்டிருப்பது வ்யக்தம். இதனுல் கோபிகளுக்குப் பலன் கிடைத்து விட்டதாக ஸ்பஷ்டமாய்த் தெரிவிக்கப் பட்டதாகிறது அது என்னபலன் என்பதை இவர் நிரூபித்தாக வேண்டும். "மழைக்காக நோன்பு நோற்ருர்கள்; மழைபெய்து விட்டது; அதுதான் கோபிகள் பெற்ற பலன்" என்ன வேண்டுமிவர். அல்லது *மாலேமணிவண்ணு* என்கிற பாட்டில் நோன்புக்காக *சாலப்பெரும்பறையே* இத்தியாதிகளை அபேக்ஷித்தார் களல்லவா, அவை கிடைத்து விட்டன; அவ்வளவோடு பேறு பெற்று முடிந்தாய் விட்டது—என்பர். (பறைகொண்ட) என்கிற சொல்நயத்திற்கு இது ஸர்வாத்மநா இணங்காது. நிகமனத்திற்கு முன்பாட்டிலே (சிற்றஞ்சிறு காலையிலே) *இற்றைப் பறை கொள்வானன்றுகாண்* என்றது, எங்களுடைய கோரிக்கை இன்ருேடு முடிந்து போவதன்று; எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் அநுவர்த்திக்கவேணு மென்று கூறியிருப்பதை நன்கு நோக்கவேணும். நோக்கினுல் பூர்வாசாரியர்கள் இட்டருளின அவதாரிகையே ஊர்ஜிதமாகும். இதைப்பற்றி மேலே விவரிப்போம்.

கீழே நாம் அநுவதித்த இவரது வாக்கியத்தில் "இந்த ப்ரபந்தத்தில் அவளுடைய மனப்போக்குக்குத் தக்கபடி பலமாறுதல்கள் இருக்கின்றன" என்றது அசட்டுவார்த்தையென்னத்தட்டில்லை. "பல மாறுதல்கள் இருக்கின்றன" என்னு

மிவர் மாறுதலாவது எத்தகைத்து? என்பதை முன்னம் நிரூபித்தாகவேண்டும். முன்னிருந்த மனப்போக்கு மாறிவிட்டதென்றுதானே இதற்குப் பொருள். திருப்பாவையே ஆண்டாளுடைய முதற்பிரபந்தம். அவளுடைய முன்னேய மனப் பான்மையை யறிந்து கொள்ள வழியிருந்தாலல்லவோ அது இதில் மாறிவிட்ட தென்று சொல்லக்கூடும். மேலும் இந்த வார்த்தையை இவர் எதற்காக எழுதுகிருரென்னில்; திருப்பாவையில் ஆண்டாளுக்கு விபரீதமான அபிஸந்தி யிருப்பதாக யாரோ சொல்வதாக வைத்து அந்த அபிஸந்தி கிடையாதென் கைக்காக எழுதினபடி. அது இவருடைய அடுத்தவாக்யத்தில் ஸ்பஷ்டமாகவே யுள்ளது. (அதாவது) "ஆகையால் திருப்பாவையில் ஆண்டாள் அதையெல்லாம் கருதாள்" என்கிருர். அதையெல்லாமென்கிறீரே எதையெல்லாம்? என்று கேட்டால் "ஆரோஹோரும்; உபபர்ஹஸ்வ பாஹும்; பரிஷ்வஜஸ்வ ஜாயாம்" என்றும் "நக்நங்க்ருத்ய ஊருமுபப்ரவர்த்தயதி, ஊருண ஹி ரேதஸ் ஸிச்யதே.... அத ப்ரஜா: ப்ரஜாயந்தே" என்றும் வேதத்தில் ஓதப்பட்ட காமநையில்லை யென்று இவர் சொல்லவேணும். ஐயோ அவலக்ஷணமே! நாயகீஸமாதியை யடைந்த திருமங்கையாழ்வார் "என்முலையாள வொருநாள் உன்னகலத்தாலாளாயே" என்றும் "என்னையும் நோக்கி என்னல்குலும் நோக்கி ஏந்திளங்கொங்கையும் நோக்குகின்ருர்" என்றும் கூறுகின்ருரே; ஆபாஸகாமத்தில் நோக்காகவா இவை கூறிற்று? ஆண்டாளும் "கேசவநம்பியைக் கால் பிடிப்பாளென்னுமிப்பேறு எனக்கருள் கண்டாய்" என்றும், பள்ளிகொள்ளுமிடத்து அடிகொட்டிடக் கொள்ளு மாகில்" என்றும் கைங்கர்ய வாஞ்சையைத்தானே விண்ணப்பஞ் செய்திருக்கிருள். (அடிகொட்டிடஎன்றது–திருவடிவருட என்றபடி.) சிலவிடங்களில் "கொங்கை மேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து" என்றும் "கொம்மைமுலைகளிடர்தீர" என்றும் "கொள்ளும்பயனென்றில்லாத கொங்கைதன்னைக்கிழங்கோடுமள்ளிப் பறித்திட்டு" என்றுமுள்ள பாசுரங்களைக்கண்டு அந்தோ! மதிகலங்கினரிவர். இத் தகைய இருளும் மருளும் மயக்கும துயக்கும் இவர்க்குத் தோன்றியதற்கு எது காரணம் தெரியுமோ? பூர்வாசார்ய வ்யாக்கியானங்களில் "இத்தால் நினைக்கிறது க்ருஷ்ண ஸம்ச்லேஷம்" என்றுள்ள ஸ்ரீஸூக்தியில் அபார்த்தங்கொண்டதே யா கும். இந்த மருளைக் கீழே வேரறவறுத்தோம். ஆனல் மருள் தொலையாதிவர்க்கு.

ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் கோபிகளின் ஸமாதிகொண்டே சில பதிகங்கள் பாடியுள்ளாள்; கண்ணனுடைய தூர்த்த சேஷ்டிதங்களினல் தாங்கள் மிக வருந்திப் பேசச் செய்தேயும் "நாமமாயிரமேத்த நின்ற நாராயணு" "ஆலிலை மேல் துயின்ற எம்மாதியாய்" "சேதுபந்தம்திருத்தினய்" "வில்லாலிலங்கை யழித்தாய்" என்கிற பலபல விளிச்சொற்களினல் அவனுடைய பராத்பரத்வத்தைத் தாங்களறிந்தமையை வெளியிட்டே பேசியுள்ளார்கள். அத்தகைய பரமபுருஷ ேேடு இவர்கள் விரும்பும் ஸம்ச்லேஷம் எத்தகைத்தாயிருக்குமென்றுணர அந்தோ! இவர்க்கு மதிகொடுக்கவில்லை இவர், தம்மைக் கடாக்ஷித்ததாகச் சொன்ன பகவத் பாகவதாசார்ய ஆண்டாள்கள். .... .... ....

அவதாரிகை முற்றிற்று

## — நூல் தொடக்கம் —

முன்னம் பூருவாசாரியர்களின் வியாக்கியான ப்ரக்ரியையை விமர்சிப்போம். அதற்கு முன்னுடி, அலங்கார சாஸ்த்ரத்திற் கூறியுள்ள வ்யஞ்ஜநா ப்ரதானமான அலங்காரங்களுள் எந்த அலங்காரத்திற்கு இலக்கியமாகத் திருப்பாவை அமைந்துள்ளது என்பதைச் சிறிது ஆராய்ந்து நிஷ்கர்ஷிப்போம். அலங்கார நூலில் அப்ரஸ்துதப்ரசம்ஸை யென்றும் ஸமாஸோக்தி யென்றும் சில அலங்காரங்களைக் கவிகள் பெரும்பாலும் உயிராக வைத்து ஸுபாஷித ச்லோகங்கள் இயற்றி யிருப்பதுண்டு. அவ்வலங்காரங்களுள் ப்ரஸ்துதாங்குர மென்பதும் ஓர் அலங்காரம்: அதற்குக் கூறியுள்ள லக்ஷணமாவது, *ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:* என்பது. அப்ரஸ்துத ப்ரசம்ஸையிலும் ஸமாஸோக்தியிலும் ப்ரஸ்துதமும் அப்ரஸ்துதமும் கலசியிருக்கும்; ப்ரஸ்துதாங்குராலங்காரத்தின் ப்ரக்ரியை அப்படிப்பட்டதன்று. வாச்யமும் வ்யங்க்யமுமாகிற இரண்டும் ப்ரஸ்துதமாகவே யிருக்கும். இதை லக்ஷணவாக்யமே ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளது.

இதற்குக் கவிகள் காட்டிப் போரும் லக்ஷ்யம் எத்தகைத்தென்று பார்ப்போம். (சந்த்ராலோகத்தில்) *கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம் கேதக்யா கண்டகேத்தயா* என்பது லக்ஷ்யமாகக் காட்டப்பட்டுள்ளது. இது வண்டைநோக்கி ஒரு காமினி சொல்லுவதாகவுள்ளது. வண்டே! நல்ல மாலதீபுஷ்பமிருக்க முள் நிறைந்த தாழையை ஏன் விரும்புகிருய்? என்பது இதன் பொருள். இதில் வாச்யார்த்தத்திற்குமேலே வ்யங்க்யார்த்தமொன்று கண்டறியவேணும். வ்யங்க்யார்த்தம்—அபாயமற்ற மனைவி யிருக்க, அவளைவிட்டு அபாயம்மிக்க வேற்று மாதரிடத்தில் விருப்பங்கொண்ட கணவனை நோக்கிக் காதலி சொல்லுவதாம்! ஆக இவ்விரண்டு பொருளும் ப்ரக்ருதமே யென்றும். 'ஒன்று ப்ரக்ருதம், மற்றொன்று அப்ரக்ருதம்' என்பது கிடையாதென்றும் கொள்ளப்படுகிறது.

குவலயானந்தகாரரான அப்பயதீக்ஷிதர் இங்கு எழுதுவது என்னவென்ருல், தன் கணவனேடுகூட உத்யானவனத்திற்குச் சென்ற காதலியொருத்தி அங்கு வண்டைக்கண்டு இங்ஙனே சொன்னுளாதலால் இது ப்ரக்ருதமானதே. இதிலிருந்து வ்யங்க்யமானது பரநாயிகாஸக்த ஸ்வகீய நாயக சிக்ஷணம். அதுவும் ப்ரக்ருதமானதே—என்று. உடனே அவர் தாமே ஒரு சங்கையைக் கிளப்பிக் கொண்டு ஸமாதானமு மெழுதியுள்ளார்; (அதாவது) அஃறிணையான வண்டை நோக்கிச் சொல்லுவதென்பது பொருந்தாதாகையாலே இங்கு வாச்யார்த்தம் ப்ரஸ்துதமாக இருக்கமுடியாதே யென்று சங்கித்து, இங்ஙனே பலவிடங்களில் காண்கிரேமென்று, மரத்தை நோக்கி ஒருவன் சொன்னதும் அதற்கு மரம் விடை கூறினதுமான சுலோகமொன்றை யெடுத்துக்காட்டி ஸமாதானம் பண்ணி யிருக்கிருர். சந்த்ராலோககாரர் காட்டின "கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம்" என்கிற உதாஹரணத்தில் வண்டை விளித்துச்சொல்லுவதுமட்டுமேயுள்ளது. தீக்ஷிதர் காட்டின *கஸ் த்வம் போ:, கதயாமி* என்கிற சுலோகத்தில் மரத்தை விளித்து வினவுவதும், வினவப்பட்ட மரம் விடைகூறுவதுமான அமைப்பு உள்ளதனல்

இந்த வினுவிடைகளும் அஸம்பாவித மென்பது அசைக்க முடியாததாம். ஸுபாஷி தரத்ன பாண்டாகாரத்தில் அந்யாபதேசச்லோகங்களை ஆயிரக் கணக்காகக் காண்கிரேும். மேகாந்யோக்தி, ப்ரமராந்யோக்தி, ஹரிணுந்யோக்தி.......இப்படி பல அந்யாபதேசங்கள் காண்பதுண்டு. அவையெல்லாம் பெரும்பாலும் அப்ரஸ்துதப்ரசம்ஸாலங்கார லக்ஷ்யபூதங்களேயன்றி ப்ரஸ்துதாங்குராலங்கார லக்ஷ்யமான ச்லோகம் ம்ருக்யமாகவேயிருக்கும். திருப்பாவை முழுவதும் ப்ரஸ்துதாங்குராலங்காரத்திற்கே லக்ஷ்யபூதமாயிருப்பதாம். அதாவது, வாச்யார்த்தமும் வ்யங்க்யார்த்தமுமான இரண்டும் ப்ரஸ்துதம் என்றபடி. இதைத்திடமாக நெஞ்சிற்கொண்டு பார்க்குமளவில் பூர்வாசார்ய வியாக்கியானங்கள் எளிதாக அந்வயிக்கும்.

திருவாய்ப்பாடியில் கோபிகளாகப் பிறந்தவர்களின் உண்மைஸ்வரூபத்தை முன்னமறிய வேண்டும். ஸ்ரீராமாவதாரத்தில் தண்டகாரண்யவாஸிகளான முனிவர்கள் பெருமாளுடைய வடிவழகிலே மோஹித்தபடியை வான்மீகிமுனிவர் "தே தம் ஸோமமிவோத்யந்தம்" 'ரூப ஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் ஸுவேஷதாம் தத்ருசுர் விஸ்மிதாகாரா: ராமஸ்ய வநவாஸிந.'' இதயாதி ச்லோகங்களினுல் வெளியிட்டுள்ளார். அப்போது அந்த மஹர்ஷிகள் பெருமாளுடைய திருமேனியை அணையவிரும்பினதாகவும் அப்போது பெருமாள் இது மற்ருேரவதாரத்திலாகும்' என்று சொல்லித் தடுத்ததாகவும், அம்முனிவர்கள் தாமே க்ருஷ்ணுவதாரத்தில் கோபிகளாக வந்து பிறந்து யதாமநோரதம் அநுபவித்து ஆசைதீர்ந்ததாகவும் ஒரு உபநிஷத்தில் ஓதப்பட்டிருக்கின்றது. இந்தப் பரிமாற்றத்தை காமுகவ்யாபாரமாக நினைப்பவர்கள் அறிவிலிகள்.

ஒரு முக்கிய விஷயம். திருவாய்ப்பாடியிலுள்ள கோபாலவ்ருத்தர்களுக்கு கோபிகளின்மீது அதிசங்கையிருந்ததென்பதை ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் பராசர மஹர்ஷி காட்டியுள்ளார். எங்ஙனே யென்னில்; சிந்தயந்தி யென்று குணநாமம் பெற்ற வொரு கோபியின் செய்தியைச் சொல்லுமிடத்து ''காசித் ஆவஸதஸ்யாந்த: ஸ்தித்வா த்ருஷ்ட்வா பஹிர் குரும்'' இத்யாதிச்லோகமுள்ளது ப்ரஸித்தம் "கோவலர் சிறுமியர் இளங்கொங்கை குதுகலிப்ப உடலுளவிழ்ந்து, எங்குங் காவலுங் கடந்து கயிறுமாலையாகி வந்து கவிழ்ந்துநின்றனரே'' என்று பெரியாழ்வாரருளிச்செய்தபடி பல பெண்கள் கண்ணனுடைய வேணுகான கோஷ்டியிலே காவலைக்கடந்து அந்வயித்திருக்க, ஒருத்திமட்டும் காவல்கடந்து செல்லமாட்டாமே நின்ருள் என்றது இதில். இதனுல், கோபாலக்கிழவர்கள் பெண்கள்மீது அதிசங்கைகொண்டு காவல்செய்திருந்தமை ஸ்பஷ்டமாகிறது.

கம்ஸப்ரேரிதரான அக்ரூரர் திருவாய்ப்பாடிக்கு வந்து கண்ணனைத் தேரிலேற்றியழைத்துப் போகும் ஸமயத்தில் கோபிகளின் ஆரவாரம் அபரிமிதம். அப்போது ''குரவ: கிம் கரிஷ்யந்தி தக்தாநாம் விரஹாக்நிநா'' என்கிற வார்த்தை கோபிகளின் வாக்கில் வெளிவந்துள்ளது. இதனுலும் கோபாலவ்ருத்தர்கள் ஆயர் சிறுமியர்களை அடக்கியாண்டுகொண்டிருந்தார்களென்பது வ்யக்தமாகிறது. இதையெல்லாம் திருவுள்ளம்பற்றியே பெரியவாச்சான்பிள்ளை திருப்பாவை வியாக்கியானுவதாரிகையிலே — 'திருவாய்ப்பாடியிலே ஒத்தபருவத்திற் பெண்களும்

தானுமாய் வளர்ந்தருளுகிற காலத்திலே, தானும் ப்ராப்த யௌவனனாய் அவர்களுக்கும் யௌவனம் வந்து தலைகாட்டினவாறே கோபவ்ருத்தரெல்லாருங் கூடி 'க்ருஷ்ணன் தூர்த்தனாயிரா நின்றான், இவன் முகத்திலே பெண்கள் விழிக்கலாகாது' என்று பார்த்து இவர்களைக் கொண்டுபோய் நிலவறைகளிலேயடைக்க'' என்கிற பங்க்திகளை யருளிச்செய்யலாயிற்று இங்கு நிலவறைகளிலேயடைக்க என்றது—பெண்கள் கண்ணன் முகத்திலே விழிக்கவொண்ணாதபடி தடுத்திருக்க என்றபடி. இப்படி கோபாலக்கிழவர்கள் தடுத்திருந்தார்களென்பதற்குப் புராணப்ரமாணத்தைக் கீழே காட்டியாயிற்று. ''எங்குங் காவலுங்கடந்து'' என்ற பெரியாழ்வார் திருமொழி ப்ரபலப்ரமாணம்.

வஸ்துஸ்திதியில் கண்ணனிடத்திலும் தூர்த்தத்தனமில்லை பெண்களிடத்திலும் அவத்யசங்கைக்கு அவகாசலேசமுமில்லை. இவர்களுடைய ஸ்த்ரீபும்பாவமும் யௌவன பருவமுமே கிழவர்களுக்கு அதிசங்காஸ்பதமாயிற்று. *ஊரவர் கவ்வை யெருவிட்டு* என்றும் *அலர்தூற்றிற்றது முதலாக்கொண்டவென்காதலுரைக்கில் தோழீ!* (திருவாய்மொழி) என்றும் சொல்லுகிற கணக்கிலே கிழவர்களின் அதிசங்கையும் அதடியான தடைச்செயல்களுமே கோபிகளின் பக்தி வளர்ச்சிக்கு ஹேதுவாயிற்று.

*ஆழிமழைக்கண்ணா பாசுரத்தில் மழைபெய்ய வேண்டியிருப்பதையும் தாங்கள் நோன்பு நோற்கப்புக்கிருப்பதையும் ப்ரஸ்தாவித்திருக்கையாலே அதற்குச் சேரவும் வியாக்கியானித்தருளினார்கள். *உங்கள் புழைக்கடைப்பாசுரத்தில் *எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும் நங்காய்!* என்றதைக்கொண்டும், *நாயகனாய் பாசுரத்தில் ''மாயன் மணிவண்ணன் நென்னலே வாய் நேர்ந்தான்'' என்றதைக் கொண்டும் பெரியவாச்சான்பிள்ளையிட்டருளின விரிவான அவதாரிகை உண்மையான நிகழ்ச்சியை உள்ளபடி காட்டுமதேயொழிய ரஸிகர்கள் உகக்கப் பொரிபுறந்தடவிச் சொன்னதன்று. எதையும் குருமுகமாகக் கேட்கப்பெறாத தௌர்ப்பாக்யத்தினால் *ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதிப்படியிலே எழுதி வைத்திருக்கிறார்.

அந்யாபதேசம் என்கிற சொல்தானுண்டென்றும் ஸ்வாபதேசமென்கிற சொல் அபஹாஸ்யமென்றும் 'ததாநீம் என்பதைக்கண்டு யதாநீமென்பதைப் போன்றது'' என்றும் யாரோ சொல்லுவதாக எழுதுகிறாரிவர். பலவருடங்களுக்கு முன்பு திருப்பாப்புலியூர் சடகோபாசாரியர் என்பவர் இங்ஙனே ப்ரஸங்கித்து P.B.A. ஸ்வாமியின் ஸுஸமீசீனமான ஸமாதானத்தைப்பெற்று சாந்தரானார். அந்த ஸமாதானம் ஒருகாலிருகாலன்று, பலகால் பல நூல்களில் வெளிவந்துள்ளது. இவர் அவற்றை யெல்லாங்கண்டு தத்துவமுணர்ந்ததனால் ''ஆகிலும் பெரியோர்களே வெகுநாளாக இந்த வ்யவஹாரத்தைச் செய்திருப்பதால் இதை ஒருவாறு ஸமர்த்திக்க வேணும். இதுநிற்க'' என்றெழுதி ஓய்ந்திருக்கிறார். அபேக்ஷா என்கிற சொல்லும் வ்யபேக்ஷா என்கிற சொல்லும் பர்யாயமென்பது சாஸ்த்ரஜ்ஞகோஷ்டிகளில் ப்ரஸித்தம்; அப்படியே அபதேசமென்கிறபதமும் வ்யபதேசமென்கிறபதமும் பர்யாயமென்பதும் ப்ரஸித்தம். அந்யவ்யபதேசம்: ஸ்வவ்ய

பதேசமென்றதாயிற்று. "அபதேச: பதே லக்ஷ்ய நிமித்தவ்யாஜயோரபி" என்று நாநார்த்தரத்நமாலை. "எப்பொருள் எச்சொலின் எவ்வாறுயர்ந்தோர், செப்பினர் அப்படி செப்புதல்மரபே" என்றார் நன்னூலாசிரியர். "முநித்ரயம் நமஸ்க்ருத்ய தது்க்தீ: பரிபாவ்ய ச" என்றார் ஒருபெரிய சாஸ்த்ரஜ்ஞர். முனிவர் மூவரின் உக்திகளைப் பரிபவப்படுத்தியா அவர் க்ரந்தமியற்றுகிறார் வாயெடுத்தால் ப்ரபூதம் ப்ரபூத மென்பவர் ப்ரபூதபலியாகொடுக்கிறார்? முனிவாஹன போகத்தில் முதற் பாட்டில் * என்கண்ணினுள்ளன வொக்கின்றதே* என்றவிடத்தில் "ஒரு உத்ப்ரேக்ஷையாலே யருளிச்செய்கிறார்" என்றுள்ளது; இங்கு வஸ்தூத்ப்ரேக்ஷையா? ஹேதூத்ப்ரேக்ஷையா? ஃபலோத்ப்ரேக்ஷையா? என்று கேட்பாருளர். ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "உத்ப்ரேக்ஷ்யதே புதஜநை ருபபத்தி பூம்நா" என்றவிடத்திலும் எவ்விதமான உத்ப்ரேக்ஷையென்று கேட்பாருளர். அவ்விடங்களிலே இவர் சர்ச்சிப்பதைவிட்டு ஸர்வாத்மநா சங்கைக்கு ஆஸ்பதமல்லாத விடத்தை யெடுத்துக்கொண்டு 'ததா நீம் யதா நீம்" என்பது விரலுக்குத் தகாத வீக்கம்.

திருப்பாவையில் அந்யாபதேசார்த்தத்தோடு நில்லாமல் ஸ்வாபதேசார்த்த முங் கொள்ள வேணுமென்பதை ஆண்டாள் திருப்பாவையிலேயே காட்டியிருக்கின்றாள் "கலந்து பேசின பேச்சரவங் கேட்டிலையோ?" என்பதனால். "செல்வ நாரணனென்ற சொல்கேட்டலும், வார்த்தை கேட்டின்புறும் மயங்கும்" என்ற பராங்குச பரகால ஸூக்திகள்போல பேச்சு கேட்டிலையோ என்னாமல் "பேச்சரவம் கேட்டிலையோ? என்றதில் விசேஷமறியவேண்டாவா? பேச்சை மட்டுங்கேட்டுப் பயனில்லை; பேச்சிலிருந்து தொனிக்கும் பொருளையுங் கேட்கவேணுமென்று ஆண்டாள்தானே காட்டியிருக்கிறபடியன்றோ.

ஸங்கல்பஸூர்யோதயத்தில்—"ர்ப்போ... இமேந்த்ரியாநந.......... லங்காருத்த விதேஹ ராஜதநயா ந்யாயேந லாலப்யதே" என்றுள்ள ச்லோகம் ஸ்ரீராமாயணத்தின் ஸ்வாப தேசார்த்தத்தைத் தெரிவிக்கின்றதென்பது குருகுல வாஸம் பண்ணினார்க்கன்றோ தெரியவரும். எழுதுகிறாரிவர்—"திருப்பாவைப் பாட்டிலுள்ள ஒவ்வொருபதார்த்தத்திற்கும் ஸமானமான வொரு பொருளை சிரமப் பட்டாவது கூறவேண்டுமா என்று ஆலோசித்துப் பார்க்கவேண்டும்" என்று. அலங்கார சாஸ்த்ரத்தில் அவகாஹன லேசமாவது இருந்தால் இப்படியெழுத நேராது. திருப்பாவையின் மூலமும் ஓதவில்லையிவர். இரண்டாம் பாட்டில் "தீக்குறளைச் சென்றோதோம்" என்று சில அறிவிலிகள் ஓதும் தவறான பாடத்தினால் சிலவாண்டு கட்குமுன்பு பிரளயம் நடந்திருக்க, இவர் இந்த நாட்டிலேயே இல்லாதவர் போன்று அந்தத் தவறான பாடத்தையே எழுதிவைத்திருக்கிறார். குறளைக்கும் குறளுக்கும் வாசியறியாதவிவர் திருப்பாவையென்று வாயாற் சொல்லவும் அதிகாரியல்லரே.

இவர் "நவீனவுரையொன்றில்" என்று மகுடமிட்டுச் சிலவரிகளைச் சில விடங்களில் எடுத்துக்காட்டி ஒன்றோடொன்று பொருந்தாத வார்த்தைகளை யெழுதிவருகிறார் இதனால் ஏதோ ஸயூத்யர்களோடு மாச்சரியங்கொண்டு இவர் இதை எழுதத்தொடங்கினரென்பது தெற்றென விளங்குகின்றது; ஊமையும் செவிடுங் கூடிப் பேசுகிறப்போலே நவீனரிருவருமே பேசித்தொலைக்கட்டும்.

அட்டையைத் திருப்பினவுடனே தலைகாலில்லாதபடி வ்யங்க்யம் என்று தலையங்கமிட்டு, தான் எழுதத் தொடங்கின சுவடிக்குச் சிறிதும் சம்பந்தமில்லா மலும் முரண்பாடும் மலிந்ததாகவும் ஏதோ எழுதியிருக்கிறது. அடிக்கடி உதார ணம் உதாரணம் என்கிறது. எதற்கு எது உதாரணமோ தெரியவில்லை. தன் னுடைய அஸங்கதபாஷணங்களுக்குத் தான் உதாரணமென்ன வேண்டும். இச்சுவடிக்குத் திருப்பாவை வாஸ்தவார்த்தமென்று பெயரிட்டதுதான் சால வற்புதம்! "ஒரு பெரியவரைப் பார்த்து 'இவர் பகவான்' என்றால் அதற்கு ஸ்ரீமந் நாராயணனென்பது முக்கியமான பொருள்; ஆனால் அப் பொருளை விட்டு லக்ஷணயா நாராயணனைப் போன்றவர் என்ற பொருளையுணர்த்தும்; அதிலிருந்து "இவரை வணங்கு. அதனால் க்ஷேமமுண்டாகும்" என்ற கருத்துத்தோன்று கின்றது. இது வ்யங்க்யமாகும்" என்று எழுதப்பட்டிருக்கிறது. *கதிரவன் குண திசைச் சிகரம்வந்தணைந்தான்* என்பதில், குளத்திற்குப் போகச் சொல்லுவதும், காபிகுடிக்கச் சொல்லுவதும் வ்யங்க்யம் என்பதோ டொக்குமிது. ஸ்ரீ பாஷ்யோ பக்ரமம் 'பகவத் போதாயநக்ருதாம்" என்பது இங்கு "பகவச்சப்தத்தைக் கேட்டுக் கைகூப்புவாருமில்லை; குருகூர்ச்சடகோபனென்று கேட்டவாறே "யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா:" என்கிறபடியே உலகமெல்லாம் கையெடுத்துக் கும்பிடுகிறது. இங்கு வ்யங்க்ய மென்கிற பேச்சே கிடையாது

"திருப்பாவையில் ஒரு பாட்டில் ஒருத்தியைக் கோவலர் தம் பொற் கொடியே! என்றழைக்கிறார்கள்; மற்றொரு பாட்டில் வேறொருத்தியை நற்செல் வன் தங்காய்! என்றழைக்கிறார்கள். ஓரிடத்தில் கோவல ரென்கிற பன்மையும் மற்றோரிடத்தில் நற்செல்வனென்கிற ஒருமையும் இருப்பதாகக் காட்டி இவற்றி லிருந்து ஏதோ வ்யங்க்யார்த்தம் தோன்றுவதாக எழுதியிருக்கிறது; பெரிய திரு மொழி முதற்பாட்டில் ஓரடியில் வாடினேனென்றார், மற்றோரடியில் கூடினே னென் றார்; இன்னோரடியில் ஓடினேனென்றார்' வேறோரடியில் நாடினேனென்றார்; இவற் றுக்கு இவரைப்போன்ற வொருவர் வ்யங்க்யம் ஸாதித்தார்; வாடினேன் வாடி யென்றதற்கு வாடி வாடுமிவ்வாணுதலேயென்ற நம்மாழ்வாருடைய வாட்டம் வ்யங்க்யம்; கூடினேன் கூடியென்றதற்கு கூடிக்கூடியுற்றார்களிருந்து என்ற பெரி யாழ்வார் காட்டின கூட்டம் வ்யங்க்யம், ஓடினேனோடி யென்றதற்கு ஓடியோடிப் பலபிறப்பும் பிறந்தென்று நம்மாழ்வார் காட்டின ஓட்டம் வ்யங்க்யம்; நாடினேன் நாடியென்பதற்கு ப்ரத்யாஹாரந்யாயேந நார்மடி வ்யங்க்யம் பலர் திருமொழி தொடக்கத்திற்கு நார்மடி சாத்திக்கொண்டு செல்வதுமுண்டு என்று சொல்லி வ்யங்க்யங்கள் வகுத்தார். அவருடைய திறமையை வென்றுவிட்டது இந்த அபார்த்தக் குடுக்கையின் திறமை.

*பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்* என்கிற அடைக்கலப் பத்துப் பாட்டுக்கு இவர் வ்யங்க்யார்த்தம் கூறினாராம்; ஒரு ஸ்வாமிக்கு மூன்று தேவிகளாம்; ஒருத்திக்கு பக்தியென்றும், மற்றொருத்திக்கு சக்தியென்றும் இன் னொருத்திக்கு முக்தி யென்றும் பெயராம். இம்மூவர்க்கும் பதியானஸ்வாமி இவர்க ளோடு கூடாமல் எத்திசையுமுழன்றோடினாராம். இக்கதை பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல் என்றதற்கு வ்யங்க்யமாம், முதலாமென்ற ஆதிசப்தத்

தாலே பக்தி யென்பவளுக்கு ஸபத்நிகளான சக்திமுக்திகளை க்ரஹிக்கவேண்டு மாம். பதி யெனக்கு என்றவிடத்தில் பதியென்றது வடசொல்லாய் பர்த்தாவைச் சொல்லுகிறதாம். அவர் மனைவிகளோடு கூடாமற்போனதை ஒவ்வொருத்தியும் "பதி யெனக்குக் கூடாமல் எத்திசையுமுழன்றோடுகிறார்" என்கிறாளாம். இந்த மஹார்த்தம் அந்தப்பாட்டுக்கு வ்யங்க்யமென்று திருமாமணி மண்டபத்தில் ப்ரஸங் கமாம். ப்ரபலகரகோஷமாம்.

இவருடைய அபத்தச்சுவடியை திடீர் திடீரென்று எந்தபக்கமெடுத்துப் பார்த்தாலும் வாயால் சிரிக்க வகையில்லை. தூமணிமாடத்தின் வாஸ்தவார்த்த மெழுதுகிறாரிவர் (பக்கம் 39ல்)—

"தூமணிமாடத்து—மாமான் மகளே மணிக்கதவம்தாள்திற என்று கூவினாள். பெண் விழிக்கவில்லை. ஆனால் இந்த சப்தத்தால் கண்விழித்த பலபெண்டு கள் அங்கே வந்தார்கள். நாயகப்பெண் அவர்களைக் கேட்டுக்கொண்டாள். தூங்குகிறவளை எழுப்புங்கோள் என்று. அவர்களெல்லாரும் உரக்க அழைத்தார்கள். கதவைத் தட்டினார்கள். பலன் ஒன்றுமில்லை. பிறகு நாயகப்பெண் மிகுந்த வருத்தத்துடன் அப் பெண்ணின் தாயாரைப்பார்த்து உன் மகள் ஊமையா? செவிடா? தூங்குமூஞ்சியா? என்று கேட்டாள். அப்படியொன்றுமில்லை யென்று மறுமொழி வந்தது." என்கிறார்.

இப்படிப்பட்ட அவலக்ஷணப் பங்க்திகளை அநுவதிப்பதும் பாதகமே. கோதை தமிழ் பாதகங்கள் தீர்க்குமதாயினும் இந்தப் பாதகத்தை ஒருநாளும் தீர்க்காது. போதும் போதும்.

அட்டையின் பின்புறத்தில் 'பிறப்பகத்தேமாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையுமென்றாப்போலே பிறந்ததும் மாய்ந்தொழிந்த தனது சில சுவடிகளைக் குறிப்பிட்டு "இவை தேசிகன் ஸ்ரீஸூக்திகளைப்பற்றிய தூஷணங்களுக்கு மறுப்பு நூல்கள்; விலை 50 நயாபைஸா" என்றெழுதியுள்ளார். ஒருவர். செத்த தண்ணீர்ப் பாம்பைக் காட்டி "இப் பெரியவர் கருத்மானைக் கொன்றவர்" என்னுமாபோலே யிருந்ததிது. "தேசிக ஸ்ரீஸூக்திகளைப்பற்றின தூஷணங்களுக்கு மறுப்பு" என் றெழுதக் கூசாமல் கைவந்ததுதான் ஆச்சரியம். தேசிகனை தூஷிக்க வழிகாட்டின வர் தாமொருவரே யென்பதை உலகமறியாதென்று நினைக்கிறார் பாவம்.

இவற்றுக்கெல்லாம் தன்னிடத்தில் எதிர்பார்க்கக்கூடிய உத்தரம் ப்ரஹா ரந்தான் என்று வ்யக்தமாகக் காட்டியிருக்கின்றவிவர் அதைத்தான் செய்யத்துணி வர்; துணியட்டும் அதற்குமேலே இதெல்லாம் எழுதுகிறவர் யார்? என்று விசாரணை செய்யத் தொடங்குவர். "இத்யௌடுலோமி:; இத்யாச்மரத்ய:; இதி காசக்ருத்ஸ்ந:; இதி ஜைமிநி:' லோபச் சாகல்யஸ்ய " என்னப்பட்ட மஹர்ஷிகள் உண்மையில் யாரோ. அவரே யென்று அறுதியிடுவதில் என்ன தடை? *கோ ஹ்யந்யோ புவி மைத்ரேய! மஹாபாரதக்ருத் பவேத்?* "புலத்தலொல்லுமோ ஞாயிற்றதொளியே"......இதி ஸர்வம் ஸமஞ்ஜஸம். ... ... *

திருப்பாவையபார்த்த திரஸ்காரம் முற்றிற்று.

## ஸ்ரீராமாநுஜன் அன்பர்களுக்கு அறிவிப்பு.

ஏறக்குறைய இருநூறு நபர்கள் ஸ்ரீராமாநுஜனுக்கு ஒருவிதமான சந்தாவும் செலுத்தாமலிருக்கிறார்கள். சிலர்க்கு மட்டுமே நாம் பத்ரிகை யனுப்புவதை நிறுத்தி யிருக்கிறோம். அவர்கள் பலவருஷங்களாகவே பாக்கியுள்ளவர்களென்பதுபற்றி. இவ்வாண்ல் சந்தா செலுத்தாதவர்களுக்குப் பெரும்பாலும் அனுப்பியே வருகிறோம். இனி இவர்களுக்கும் நிறுத்தி விடுவோமென்று நாம் நினைக்காதபடிக்கு பாக்கியுள்ளவர்கள் விரைவில் செலுத்த வேணுமென்று கோரப்படுகிறார்கள்.

இப்படிக்கு, மானேஜர்.

### P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல்·துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்தவுரைகள்
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்தவுரைகள்
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ரவுரைகள்
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்
5. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்
6. ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்
7. வேதாந்தப் பொருள் விளக்க நூல்கள்
8. வேதலக்ஷணவிசார நூல்கள்
9. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடுகள்
13. வடமொழி நூல் திரள்கள்
14. ஹிந்தீ பாஷையில்
15. தெலுங்கு பாஷையில்
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

If undelivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
KANCHEEPURAM-3.



8
7426 Sri Vengeepuram
53 Raghavacharyaswami,
Melkote, (Mysore State)

**Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kanchipuram-3.**